உ

சிவமயம்

# பதிப்புரை

திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த தேவாரப்பதிகங்கள் சைவசித்தாந்த மகா சமாஜத்தின் வெளியீடாக ஆறு ஆண்டுகட்கு முன்னர் பதிப்பிக்கப்பட்டன. இந்நூல் இப்போது சமாஜத்தின் கைவசத்திலில்லாதபடியாலும், சமாஜ வெளியீடுகளாகப் பன்னிருதிருமுறைகளும் எப்போதும் நந்தமிழ் நாட்டில் நிலைபெற்றிருத்தல் வேண்டுமென்று ஆயிரக்கணக்கான சைவ நன்மக்கள் விரும்புவதாலும் இவ்விரண்டாம் பதிப்பு பற்பல சீர்திருத்தங்களோடு இன்று திருக்கச்சி ஏகம்பத்தில் மாவடி வைகும் செம்மேனிச் செல்வன் திருமுன்பு சமாஜ மகாநாட்டின் தொடக்கத்தில் சமாஜ வெளியீடாகச் சமர்ப்பிக்கப்படுகிறது.

இந்நூல் அச்சிடப்பட்டபோது அச்சுத்தாள்களைப் பரிசோதித்தும் வேறுபல திருத்தங்களைச்செய்தும் உபகரித்த சைவத்திருவாளர்கள் மா. துரைசாமிமுதலியார், திரு. வி. உலகநாதமுதலியார் ஆகிய இருவருக்கும் சமாஜத்தின் நன்றி பெரிதும் உரித்து. இவர்களுள் திரு. மா. துரைசாமி முதலியார் மிகுந்த ஊக்கத்தோடு சரித்திர முறைப்பதிக அட்டவணையையும் தொகுத்து உதவிபுரிந்தனர். வழக்கம்போல் சாது அச்சுக்கூடத்தினர் செம்மையாகவும் விரைவாகவும் அச்சிட்டு முடித்தனர்.

இவ்வெளியீடு தமிழுலகுக்கும் சைவ உலகுக்கும் எல்லா நலங்களையும் அளிக்குமாறு கச்சிப்பொலி காமக்கோடியுடன் கூடி இச்சித்திருக்கும் எம்பெருமான் திருவடிகளை வழுத்துகின்றேன்.

இங்ஙனம்

திருக்கச்சி ஏகம்பம்
தாது௵ மார்கழி௴ ௧௭௳
1—1—1937.

ம. பாலசுப்பிரமணியன்
காரியதரிசி
சைவசித்தாந்த மகா சமாஜம்

# முதற்பதிப்பின் பதிப்புரை



சைவ சித்தாந்த மகா சமாஜத்தினர் சென்ற இரண்டு ஆண்டுகளில் முறையே சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தை, முதிய நல்லாடிதன்னில் சுத்தமாம் சுவாதி நாளிலும், திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத்தைச் சித்திரைச் சதயத்திலும் அடக்கவிலைச் சுத்தப் பதிப்புக்களாக வெளியிட்டு அவ்விரு குரவர்க்கும் பாதகாணிக்கையாகச் சமர்ப்பித்தனர். இவ்வாறு இறைவன் திருவருள் இருந்ததைக் கண்ட நம் தமிழ் நாட்டினர் "சம்பந்தர் தேவாரம் எப்போதுவரும் எப்போது வரும்? என்று அனந்த முறை வினவுவாராயினர். முக்கட் பரமன் அருட்டுணை கொண்டும் மூவேந்தர் தமிழ்நாட்டின் ஆர்வத் துணைகொண்டும் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தின் அடக்கவிலைச் சுத்தப் பதிப்பாகிய இந்நூல், திருநல்லூர்ப் பெருமணத்தில் வைகாசி மூலத் திருநாளாகிய இன்று வெளிவருவதாயிற்று. வழக்கம்போல் திருவாளர்கள் - கி. குப்புச்சாமி முதலியார், திரு. வி. உலகநாத முதலியார், அ. சோமசுந்தரம் செட்டியார், பரலி. சு. நெல்லையப்பர் ஆகிய நான்கு நண்பர்களும் அச்சுத் தாள்களைத் திருத்தி இந்நூல் சுத்தப் பதிப்பாக வருதற்குத் துணைபுரிந்தார்கள். வழக்கம்போல் சைவ அச்சுக்கூடத்தினருள் தலை சிறந்து விளங்கும் சாது அச்சுக்கூடத்தினர் மிக விரைவாகவும் மிகச் செம்மையாகவும் பணியியற்றி இப்பதிப்பு இந்நன்னாளில் வருதற்குத் துணைபுரிந்தார்கள்.

சைவ சமயத்தின்கண் மிளிர்கின்ற தோத்திரம் சாத்திரம் என்பவற்றை எனது மூன்றாமாண்டு தொட்டே எனக்

குச் சிறுகச் சிறுகப் போதித்து, என்னைச் சைவத் திருத் தொண்டில் நிலைத்திருக்குமாறு பேருதவி புரிந்த எனது தாய் தந்தையர் நினைவுக்குறியாக ஏதேனும் நிலைத்ததிருப் பணி யொன்று செய்தல் வேண்டுமென்ற அவா, அவ்விரு முதுகுரவரும் உடல் நீத்தநாள் தொட்டு என்னுட் குடி கொண்டது. அத்தகைய நன்றி யறிதலான நினைவுக்குறியாக இச் சுத்தப் பதிப்பு நூலை, இறைவன் எனக்களித்த பொருளைக் கொண்டு வெளியிடுமாறு அவ்விறைவன் திருவருளே அறிவுறுத்துவதாயிற்று. இந்நூலை என் தாய் தந்தையர் நினைவுக்குறியாக வெளியிடுவதற்கு விடை தந்த சைவ சித்தாந்த மகா சமாஜத்தினருக்கு நான் பெரிதும் கடப்பாடுடையேன். இம்முறையைக் கைப்பற்றி ஏனைய சிலர்கள் தத்தம் உறவினர் நினைவுக்குறிகளாகவாவது ஏனைய திருமுறைகளையும் பதிநான்கு சாத்திரம் முதலியவற்றையும் அடக்க விலைச் சுத்தப் பதிப்புக்களாக வெளியிடுதற்கு உளங்கொள்ள இறைவன் இன்னருள் துணை நிற்பதாக.

இந்நூல் வெளிவருவதற்குத் துணைபுரிந்த மேற்கூறிய பெரியார்கட்கெல்லாம் நன்றி கூறுவதோடமையாது, இவர்கள் மேன்மேலும் இத்தகைய தொண்டுகளை நீடூழி செய்திருக்க அருள் புரியுமாறு முழுமுதற்கடவுளை மும்முறை வழுத்துகின்றேன்.

இங்ஙனம் :

திருநல்லூர்ப்பெருமணம்,
பிரசோற்பத்தி ஆண்டு,
வைகாசிமூலத்திருநாள்,
2—6—1931

ம. பாலசுப்பிரமணிய முதலியார்,
பி. ஏ., பி. எல்., காரியதரிசி,
சைவ சித்தாந்த மகா சமாஜம்,
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு,
ஜார்ஜ் டவுன், சென்னை.

உ

சிவமயம்

# உரிமையுரை

" அட்டசித்தியும் நல்அன் பருக்கருள
விருது கட்டிய பொன் அன்னமே "—தாயுமானார்

" புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலா முருக்கி எளிமையா யாண்ட
ஈசனே மாசிலா மணியே "—திருவாசகம்

கயிலை நிகர்க்கும் மயிலைப் பதிக்கண்
தொழுதுணை மரபின் பழுதிலா வித்து,
செல்வ நிலனில் கல்வி யொளியில்
நேயப் புனலில் மேய ஒழுக்க
வளியில் இன்ப வெளியில் வளர்தரு,
அறநூல் சைவத் திறநூல் சாரம்
தேங்கித் திரண்ட பாங்குடைக் கேணி,
ஓதித் தமிழ்மறை ஆதியை யுன்னி
நைந்துநைந் துருகி உந்துநீ ருருவி,
குடிப்பிறப் படக்கம் படிப்பு நிறையே
விருந்தே ஈகை பொருந்திய வல்லி
முன்னைத் தொடர்பால் பின்னு பொறைமலை,
வள்ளுவர் வாசுகி உள்ளற மோம்பி
ஒப்புர வுறைந்தே ஐப்பசி அறுநாள்
நோன்பிருந் தடியனை ஈன்றிருங் கல்வி
அழியாப் பொருட்டுணை வழியால் வளர்த்த
ஆருயிர் அன்னை சீருயர் அப்பன்
ஆசில்அன் னம்மாள் மாசிலா மணிவேள்
இருமுது குரவர் பெருநினை வுக்குறி
ஆக இலங்க வாகைக்
காழியன் அருண்மறை வாழியிப் பதிப்பே.

இங்ஙனம் :

ம. பாலசுப்பிரமணியன்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# உள்ளுறை

[எண்கள் பக்கங்களைக் குறிப்பன. தலப்பெயர்கள் முன் "திரு" என்பதைக் கூட்டிக் கொள்க.]

உ

சிவமயம்

# திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் மீது தோத்திரங்கள்



திருச்சிற்றம்பலம்

உறவும் பொருளும் ஒண்போகமும் கல்வியும் கல்வியுற்ற
துறவும் துறவிப் பயனும் எனக்குச் சுழிந்தபுனல்
புறவும் பொழிலும் பொழில்சூழ் பொதும்பும் ததும்பவண்டின்
நறவும் பொழில்எழிற் காழியர் கோன்திரு நாமங்களே. க

கவிக்குத் தருவன கண்ணுக் கினியன கேட்கிலின்பஞ்
செவிக்குத் தருவன சிந்தைக் குரியன பைந்தரள
நவிக்கட் சிறுமியர் முற்றின் முகந்துதஞ் சிற்றில்தொறுங்
குவிக்கத் திரைபரக் குங்கொச்சை நாதன் குரைகழலே. உ

உறுகின்ற அன்பினொ டொத்திய தாளமும் உள்ளுருகிப்
பெறுகின்ற இன்பும் பிறைநுதல் முண்டமுங் கண்டவரைத்
தெறுகின்றவாறென்ன செய்தவமோ வந்தென் சிந்தையுள்ளே
துறுகின்ற பாதன் கழுமலம் போலுந் துடியிடைக்கே. ௩

பெறுவது நிச்சயம் அஞ்சல் நெஞ்சே பிரமாபுரத்து
மறுவறு பொற்கழல் ஞான சம்பந்தனை வாழ்த்துதலால்
வெறியுறு கொன்றை மறியுறு செங்கை விடையெடுத்த
பொறியுறு பொற்கொடி யெம்பெருமான்அமர் பொன்னுலகே.

என்றும் அடியவ ருள்ளத் திருப்பன இவ்வுலகோர்
நன்று மலர்கொடு தூவித் துதிப்பன நல்லசங்கத்
தொன்றும் புலவர்கள் யாப்புக் குரியன ஒண்கவியைப்
பொன்றும் கவுணியன் சைவ சிகாமணி பொன்னடியே. ரு

மயிலேந் தியவள்ள றன்னை யளிப்ப மதிபுணர்ந்த
எயிலேந் தியசண்பை நாத னுலகத் தெதிர்ப்பவரியார்
குயிலேந் தியபொழிற் கொங்கேந் தியகொம் பினம்புகழீஇ
அயிலேந் தியமலர் கண்டுளை ஞய்வந்த வண்ணலுக்கே. ௬

கண்ணார் திருநுத லோன்கோலக் காவிற் கரநொடியால்
பண்ணார் தரப்பாடு சண்பையர் கோன்பாணி நொந்திடுமென்

றெண்ணு மெழுத்தஞ்சு மிட்டபொற் றாளங்க ளீயக்கண்டும்
மண்ணார் சிலர்சண்பை நாதனை யேத்தார் வருந்துவதே. ௭

முத்தனை வெண்ணகை யார்மயன் மாற்றி முறைவழுவா
தெத்தனை காலநின் றேத்து மவரிலு மென்பணிந்த
பித்தனை யெங்கள் பிரானை யணைவ தெளிதுகண்டீர்
அத்தனை ஞானசம் பந்தனைப் பாத மடைந்தவர்க்கே. ௮

கடலன்ன பொய்மைகள் செய்யினும் வெய்ய கடுநரகத்
திடநம னேவுதற் கெவ்விடத் தானிருஞ் செந்தமிழாற்
றிடமன்னு மாமதிற் சண்பைத் தலைவன்செந் தாமரையின்
வடமன்னு நீண்முடி யானடிப் போதவை வாழ்த்தினமே. ௯

அந்தமுந் தும்பிற வித்துயர் தீர வரனடிக்கே
பந்தமுந் தந்தமிழ் செய்த பராபரன் பைந்தடத்தேன்
வந்துமுந் திந்த முத்தங் கொடுப்ப வயற்கயலே
சந்தமுந் தும்பொழிற் சண்பையர் காவலன் சம்பந்தனே. ௧௦

பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனுந் தோற்றோணி கண்டீர்—நிறையுலகில்
பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ். ௧௧

நிலத்துக்கு மேலாறு நீடுலகத் துச்சித்
தலத்துக்கு மேலேதா னென்பர்—சொலத்தக்க
சுத்தர்கள் சேர்காழிச் சூரன்ஞான சம்பந்தன்
பத்தர்கள் போய்வாழும் பதி. ௧௨

மலைத்தலங்கண் மீதேறி மாதவங்கள் செய்து
முலைத்தலங்க ணீத்தாலு மூப்பர்—கலைத்தலைவன்
சம்பந்தற் காளாய்த் தடங்காழி கைகூப்பித்
தம்பந்தந் தீராத தாம். ௧௩

—நம்பியாண்டார் நம்பி.

திருச்சிற்றம்பலம்

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் சரித்திரம்

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்

திருச்சிற்றம்பலம்

அன்னம்பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம் முதலிய தலங்களையும், பொன்னம்பாலிக்கும் பொன்னியாகிய காவிரி முதலிய தீர்த்தங்களையும், முன்னங் காலனைக் காய்ந்து அடைக்கலம் புகுந்த அந்தணாற்கருளிய அண்ணலாதிய மூர்த்திகளையும் உடையது சோழவளநாடு. இந்நாட்டிற்கொரு திலகமாய் விளங்குவது பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சைவயம், கழுமலம் என்னும் பன்னிரண்டு திருப்பெயர்களையுடைய சீகாழிப் பதியாகும். இவ்வூரிலே இப்போது கௌண்டிந்ய கோத்திரம் என்று வழங்கப்படுகிற கௌணிய கோத்திரத்திலே அவதரித்த சிவபாத இருதயர் என்ற அந்தணசீலர் பகவதி என்ற பெண்மணியை மணந்து, வேத நெறியிலும் மிகு சைவத் துறையிலும் வகுத்துள்ள ஒழுக்கத்தில் ஒரு சிறிதும் பிறழாது நின்று, இல்லறத்தைச் செவ்வையாய் நடத்தி வந்தனர். புத்திரப் பேறில்லாமையால், இருவரும் சிவபெருமானை நோக்கித் தவமிருந்து "இப்போது தமிழ்நாட்டில் வேரூன்றியிருக்கும் பௌத்தம், சமணம் என்ற புறப் புறச் சமயங்களை யொழித்துச் சைவத்தை நிலைநாட்டவல்ல சமயாசாரியார் தோன்ற வேண்டும்" என்று வேண்டிக்கொண்டனர். அவர்கள் தவத்துக்கு உவந்து இறைவன் அருள்சுரக்கவும், பகவதியார் கருப்ப

வதியாகி ஒவ்வொரு மதியிலும் நடைபெற வேண்டிய வேதவிதிச் சடங்குகள் நிறைவெய்திய பின்னர், பத்தாம் மாதத்திலே - திருவாதிரை நன்னாளிலே - நற்கோள்கள் உச்சத்திலிருக்கும் வேளையிலே ஒளி பொருந்திய அழகுமிக்க ஆண்குழந்தையைப் பெற்றெடுத்தார். இவ்வாண் குழந்தையே தேவாரத் திருமுறைகள் முதல் மூன்றையும் திருவாய்மலர்ந்தருளிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் ஆவார்.

சிவபாதவிருதயரும் பகவதியாரும் குழந்தையை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தார்கள்; குழந்தைக் குரிய வைதிகச் சடங்குகளை யெல்லாம் முறைப்படி செய்து வைத்தார்கள். குழந்தைக்கு மூன்றாவது வயது நடந்து வரும்போது, அது ஒரு நாள் தனது தகப்பனாரோடு திருக்கோயிலுக்குச் செல்ல வேண்டுமென்று பிடிவாதமாய் அழுதது. தந்தையார் குழந்தையை அழைத்துச் சென்று குளக்கரையில் உட்கார வைத்து விட்டுக் குளத்தில் இறங்கி அகமர்ஷணமந்திரத்தை ஓதிக்கொண்டே தண்ணீருள் மூழ்கி ஸ்நானம் செய்வாராயினர். தமது தந்தையாரைக் காணாத குழந்தையார் பல திசைகளிலும் நோக்கியழுது கடைசியாகத் " தம்மேலைச் சார்புணர்ந்தோ சாரும் பிள்ளைமை தானோ " திருத்தோணியப்பர் கோயில் சிகரத்தைப் பார்த்து " அம்மே அப்பா" என்று அழத்தொடங்கினர். உடனே தோணியப்பர் தேவியாரோடு இடபவாகனத்தின் மேலேறி அழுகின்ற பிள்ளையின் முன் தோன்றிப் பொற்கிண்ணத்தில் திருமுலைப்பாலைக் கறந்து சிவஞானத்தைக் கலந்து ஊட்டும்படி பார்வதிதேவியாருக்குக் கட்டளை யிட்டார். தேவியாரும் அவ்வாறே செய்தனர். ஞானப்பாலை யுண்டவுடனே " சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம், பவமதனை அற மாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம் உவமையிலாக் கலைஞானம், உணர்வரிய மெய்ஞ்ஞானம்" எனப்பட்ட ஞானம் முழுமையும் கைவரப் பெற்ற குழந்தைக்குத் **திருஞானசம்பந்தர்** என்ற காரணப் பெயர் உண்டாயிற்று. ஞானப்பாலை ஊட்டிவிட்டு இறைவனும் இறைவியும் மறைந்து போயினர். குழந்தையும் அப்போதுண்ட பால்வடிந்த உதடுகளோடு குளக்கரையில் உட்கார்ந்திருந்தது. தந்தையார் ஸ்நானத்தை முடித்துக்கொண்டு கரையின்மேல் வந்து குழந்தையைக் கண்டு " உனக்குப் பால் கொடுத்தது யார்?

வழிப்போக்கர் யாரோகொடுத்த பாலை நீ ஏன் உண்டாய்?" என்று கோபத்தோடு ஒரு குச்சியை ஓங்கி அடிப்பவர்போல் கேட்டார். உடனே சிவஞானம் கைவரப்பெற்ற குழந்தை பால் கொடுத்தவர் இறைவனும் இறைவியுமே என்பதை யுணர்த்தித் தாம் நேரே கண்ட இடபவாகனருட திவ்வியக் கோலத்தை அறிவுறுத்தித் "தோடுடைய செவியன்" (பக்கம் - க) என்ற திருப்பதிகத்தைத் திருவாய் மலர்ந்தருளினார். உடனே சிவபாத விருதயர் தமது குழந்தை, சிவஞானம் பெற்ற தெய்வக்குழந்தை என்பதை யுணர்ந்தார். இருவரும் திருக்கோயிலில் சிவபெருமான் சந்நிதிக்குச் சென்று வணங்கினர். கோயிலிலும் ஊரிலும் உள்ளார் அனைவரும் குழந்தை ஞானப்பாலுண்ட செய்தியை யறிந்து ஆநந்தத்தோடு திருஞான சம்பந்தரை ஊர்வலமாக இல்லத்துக்கு அழைத்துச் சென்றனர். தாம் ஞானப் பாலுண்ட செய்தியைத் திருஞானசம்பந்தர் சில ஆண்டுகள் கழித்துத் தாம் பாடிய "போதையார் பொற்கிண்ணத்தடிசில் பொல்லாதெனத், தாதையார் முனிவுறத் தானெனையாண்டவன்" (பக்கம்-சஎஙு) என்ற தேவாரப் பாடலிலும் கூறியுள்ள அகச்சான்று நமக்குக் கிடைத்திருக்கிறது.

சிலநாட்கழித்து, சீகாழிக் கண்மையிலுள்ள திருக்கோலக்காவைத் தரிசிப்பதற்கு விரும்பிய தம்மைத் தந்தையார் தோளின்மேல் ஏற்றிச் செல்லத் திருஞான சம்பந்தர் திருக்கோயிலையடைந்து கைகளால் தாளம்போட்டு "மடையில் வாளை" (பக்கம் - ஙஅ) என்ற பதிகத்தை ஓதியருளினார். உடனே கண்ணுதல் வள்ளல் சுவாமிகட்குப் பஞ்சாக்கரம் வரையப்பெற்ற பொற்றாளங்களிரண்டை அசரீரியாகவிருந்து உதவினார். சுவாமிகள் அவைகளைப் பெற்றுத் தமது தேவாரத் திருத்தொண்டுக்குப் பயன்படுத்திக் கொண்டார்.

திருஞானசம்பந்தர் ஞானப்பாலுண்டு பொற்றாளம் பெற்ற செய்தியைக்கேட்ட சோழநாட்டு மக்கள் ஊர் ஊராகத் திரள் திரளாகவந்து சுவாமிகளைத் தரிசித்து மகிழ்ந்து தங்கள் தங்கள் ஊர்கட்கெல்லாம் வந்தருளும்படி வேண்டினார்கள். சுவாமிகளும் அவர்கள் வேண்டுகோளுக் கிணங்கித் தலயாத்திரைசெய்து தேவாரங்களை ஓதி யருளினார். அவ்வாறு முதன்முதலாகச் சென்றவிடம் தமது தாயார் பிறந்த ஊராகிய திருநனிபள்ளி என்பதாகும்.

சிதம்பரத்துக்கருகேயுள்ள திருஎருக்கத்தம்புலியூரில் வசித்த திருநீலகண்டப் பெரும்பாணரும் அவர்மனைவி மதங்க சூளாமணியும் திருஞானசம்பந்தரைத் தரிசிக்கச் சீகாழி போந்தனர்; சுவாமிகளைக் கண்டு மகிழ்வெய்தி, சுவாமிகள் தேவாரப் பதிகங்களைத் தங்கள் யாழில் அமைத்து வாசித்தனர். அவர்கள் சுவாமிகளோடு எல்லாவிடங் கட்கும் உடன் சென்று சுவாமிகள் பாடும் தேவாரப்பதிகங்களை யெல் லாம் அவ்வப்போது யாழிலமைத்துப் பாடும்வரத்தையும் பெற்றார்கள்.

திருஞானசம்பந்தர் சிதம்பரம் முதலிய பல தலங்களைத் தரிசித் துத் திருநெல்வாயிலரத்துறையைக் காணவிரும்பித் தந்தையார் தோளினின்றும் இழிந்து நடந்து சென்றார். சற்றுநேரங்கழித்துக் களைப்புற்று வழியிலுள்ள மாறன்பாடி என்ற வூரில் ஐந்தெழுத்தோதி அயர்ந்தனர். அவ்விரவு இறைவன் திருநெல்வாயிலரத்துறை வாசி களின் கனவில் தோன்றி, திருக்கோயிலில் முத்துச்சிவிகை, குடை, சின்னங்கள் வைத்திருப்பதாகவும் அவற்றைச் சுவாமிகட்குச் சேர்ப் பிக்கும்படியாகவும் கட்டளையிட்டருளினார். சுவாமிகளுக்குங் கனவில் தோன்றி அவைகளை யேற்றுக்கொள்ளும்படி கட்டளையிட்டனர். விடி யற்காலத்திலே திருநெல்வாயிலரத் துறைவாசிகள் கோயிலிற் சென்று முத்துச் சிவிகை குடை சின்னங்கள் மிளிர்வதைக் கண்டு வியந்து அவற்றைச் சுவாமிகளிடம் சமர்ப்பித்தார்கள். சுவாமிகளும் "எந்தை யீசனெம் பெருமான்" (பக்கம் - ௩எ௬) என்ற பதிகம்பாடி ஐந் தெழுத்தோதி, சிவிகையில் ஆரோகணித்தார். பரிவாரங்கள் குடை முதலிய சின்னங்களைத் தாங்கி நின்றனர். சுவாமிகள் பிறகு பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு சீகாழியடைந்தனர்.

பிறகு உபநயனப் பருவத்தில் திருஞானசம்பந்தருக்கு வேத விதிப்படி உபநயனச் சடங்கு நடந்தது. வேதங்களின் முடிந்த பொருள்களை ஓதாதுணர்ந்த திருஞானசம்பந்தர் உபநயனச் சடங் குக்கு வந்திருந்த மறையோருக்குள்ள ஐயந்திரிபுகளை யெல்லாம் நீக்கி ஐந்தெழுத்தின் பெருமையை விளக்கித் "துஞ்சலுந் துஞ்சலிலாத போழ்தினும்" (பக்கம் - சஎ௦) என்ற பஞ்சாக்கரப் பதிகத்தையும் ஓதியருளினார்.

திருஞானசம்பந்தர் வரலாற்றைக் கேள்விப்பட்ட திருநாவுக்கரசு சுவாமிகள் அவரைக் காண்பதற்கென்றே சீகாழிக்கு வந்தனர். சுவாமி

களும் அவரை எதிர்கொண்டழைத்து உபசரித்து இருவருமாகக் கோயிலைவணங்கிச் சிலநாள் இன்புற்றிருந்தனர். பிறகு திருநாவுக்கரசு சுவாமிகள் பல தலங்களைத் தரிசிக்கச் சென்றார். திருஞானசம்பந்தரும் சிவனடியார் புடை சூழப் பல பதிகளைத் தரிசித்துத் திருப்பாச்சிலாச்சிராமத்தை யடைந்தனர். ஆங்குள்ள கொல்லி மழவன் என்ற அரசன் சுவாமிகளை எதிர்கொண்டழைத்துக் கோயிலுக்குள் சிவசந்நிதானத்துக்குச் சென்றான். ஆங்கு முயலகன் என்னும் கொடிய நோயினால் பீடிக்கப்பட்டு அறிவற்று நிலத்தில் வீழ்ந்து கிடக்கும் தனது புத்திரியைக் காட்டி அவள் நோயைத் தீர்த்து அருள் புரியுமாறு சுவாமிகளை வேண்டினான். உடனே இறைவன் மீது "துணிவளர் திங்கள்" (பக்கம்-எ௩) என்ற பதிகம்பாடி திருஞானசம்பந்தர் அவள் நோயைத் தீர்த்தருளினார். பிறகு பலதலங்களைத் தரிசித்துக்கொண்டு திருக்கொடிமாடச் செங்குன்றூரை யடைந்தார். ஆங்கு முன்பனிக் காலத்தில் ஒருவகையான விஷச் சுரநோய் வருவது வழக்கம். சுவாமிகளோடு வந்த அடியார் குழாங்களையும் அவ்விஷச்சுர நோய் பிடித்துக் கொண்டது. இதை யறிந்த சுவாமிகள் "அவ்வினைக்கிவ்வினை" (பக்கம் - க௮௬) என்ற பதிகம் பாடி இறைவன் திருவருளால் அடியார் குழாங்களுக்குற்ற நோயைத் தீர்த்ததுமட்டுமேயன்றி அவ்வூரிலும் எக்காலத்திலும் அவ்விஷச்சுரம் வரவொட்டாமல் திருவருள் புரிந்தனர்.

பிறகு பலதலங்களைத் தரிசித்துவிட்டு, திருப்பட்டீச்சரத்தை யணையும்போது வெயில் மிகுந்ததால் நிழல் தருவதற்கு ஆகாயத்தில் சிவபூதம் ஒன்று முத்துப்பந்தர் ஒன்றைத் தாங்கிற்று. பிறகு அப்பந்தர் இழிந்தது. பரிசனங்கள் அதை தாங்கிக் கொண்டார்கள். சுவாமிகளும் தில்லை மூதூராடிய திருவடி நீழலெனவே அம்முத்துப் பந்தர் நிழலை யெண்ணித் திருக்கோயில் சென்று "பாடன் மறைசூடன்" (பக்கம் - ரு௫க) என்னும் பதிகம்பாடிப் பலதலங்களைத் தரிசித்துக் கொண்டு திருவாவடுதுறையை அடைந்தனர்.

ஆங்குறையு நாளில் சிவபாத விருதயர் வந்து வேள்வி செய்தற்குரிய காலம் வந்துவிட்டபடியால் பொருள் வேண்டுமென்று சுவாமிகளைக் கேட்டார். சுவாமிகளும் "அந்த மில்பொரு ளாவன ஆவடு துறையுள் எந்தையார் அடித்தலங்களன்றோ" என்ற கருத்துத் தோன்ற "இடரினுந்தளரினும்" (பக்கம் - ௪௪௦) என்ற திருப்பதி

கத்தை ஓதினார். உடனே ஒரு சிவபூதம் தோன்றி அகன் பீடத் துச்சி வைத்தது பசும்பொன் ஆயிரங்கிழி யொன்று. வைத்துவிட்டு முன்னின்று "நல்வாக்கால் உய்த்த இக்கிழி பொன்னுலவாக்கிழி யுமக்கு நித்தனார் அருள் செய்தது" எனக் கூறி மறைந்தது. அதைத் தந்தையாரிடம் கொடுத்து "நல் வேள்வி தீதுநீங்க நீர் செய்யும்" என்றருளினார் திரு மகனார்.

பிறகு பல தலங்களை வணங்கித் திருநீலகண்டத்துப் பாணனார் தாய் பிறந்த ஊராகிய தருமபுரத்தைத் திருஞானசம்பந்தர் அடைந் தார். அவ்வூரில் பாணனார் சுற்றத்தார் பாணனார் திருத்தொண்டை வியந்து "திருப்பதிகத்திற் கிளர்ந்த வோசை, அளவு பெறக் கருவி யின் நீர் அமைத்தியற்றுவதனாலே யகில மெல்லாம், வளரிசை நிகழ்வதென" விளம்பினார்கள். பாணனார் உளநடுங்கித் "திருப்பதிக இசை யளவுபடா வகையை இவர்களும் உலகத்தவரும் அறியுமாறு ஒரு பதிகம் பாடவேண்டும்" என்று திருஞானசம்பந்தரை வேண்ட, சுவாமிகளும் "மாதர்மடப்பிடியும்" (பக்கம் உ௨க) என்னும் யாழ்மூரிப் பதிகம் பாடினார். அப்பதிகம் இசையாழில் அடங்காதது கண்ட பாண னார் யாழை யுடைக்க ஓங்கினார். உடனே சுவாமிகள் அதனை வாங்கி "ஐயரே, அம்மையப்பர் திருவருளின் பெருமை யெல்லாம் இக்கருவி யினில் அளவு படுமோ? இயன்ற வரையிலேயே வாசிப்பீர்" என்று மீண்டும் யாழைப்பாணனாரிடம் தந்தார். அதைப் பெற்றுப் பாணனார் வழக்கம்போல் சுவாமிகட்கு யாழ்த்தொண்டு புரிந்திருந்தனர்.

இதன் பின்னர் பல தலங்களில் இறைவனை வணங்கி, சுவாமிகள் திருமருகலையடைந்தார். ஆங்கு கோயிலுக்கெழுந்தருளும்போது ஓர் அழுகுரலோசை கேட்டது. தன்னை மணந்து கொள்ளக்கருதிய வணி கனும் தானுமாக வர, வழியில் அவ்வணிகன் பாம்பு கடித்திறக்கத் திக் கற்றவளுக்குத் தெய்வமே துணை யென்று ஒரு பெண் கதறியழுங் குரலோசை அது வென்பதை யறிந்த சுவாமிகள் "சடையாயெனு மால்" (பக்கம்-உ௫உ) என்னும் பதிகம் பாடி விஷத்தை யிறக்கி அவ் வணிகனை உயிர்ப்பித்தனர். சுவாமிகளின் திருவடிகளில் இருவரும் வீழ்ந்து வணங்கவும், அவர்கட்குப் "புகலிவேந்தர், மணம்புணரும் பெருவாழ்வு வகுத்துவிட்டார்." பிறகு சிறுத்தொண்ட நாயனார், முருக நாயனார் வேண்டு கோள்களுக்கிணங்கித் திருச்செங்காட்டங்

குடியையும், திருப்புகலூரையும் தரிசித்து ஆங்கு திருநாவுக்கரசு சுவாமிகளைக் கண்டு ஆரூர் திருவாதிரைவிழாச் சிறப்பை அவர் கூறக் கேட்டுத் திருவாரூர்சென்று வணங்கி, பின் சில தலங்கட்குச் சென்று திருவீழி மிழலையை அடைந்தார். ஆங்குள்ள சிவபெருமான் காழி நகர்த் தோணியப்பரைப்போல் காட்சி கொடுத்ததைக் கண்டு களித்து அவ்வூரிலேயே சில காலம் தாமும் நாவுக்கரையருமாகத் தங்கி யிருந் தார்கள். அப்போது பஞ்சக் கொடுமையால் அடியார் குழாங்கள் வருந்த, கடவுள் கோயிலுள் இரண்டு பீடங்களில் தினந்தோறும் பஞ்சம் முடியுமளவும் ஒவ்வொரு பொற் காசு தந்து உதவினர், அக் காசுகளைப் பெற்றுத் திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் தனித் தனியே தங்கள் திருமடங்களிற் சிறப்பாக அடியவர்க்கு அமுதளித்து வந்தனர். தாம் பெற்ற காசுகள் வாசியின்றி (வட்டமில்லாமல்) மாறாததைக் கண்ட திருஞானசம்பந்தர் "வாசி தீரவே" (பக்கம்-கூ௨) என்ற பதிகம் பாடி நற்காசு பெற்றனர்.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரையரும் பல தலங்களைத் தரிசித்துக் கொண்டு திருமறைக்காட்டை யடைந்தார்கள். ஆங்குள்ள திருக்கோயிலின் கதவு மறைகளால் அடைக்கப்பட்டிருந்தது. அடி யார்களெல்லாம் வேறொரு திட்டு வாசல் வழியாகவே செல்லும் வழக் கம் ஏற்பட்டது. இதைக்கண்ட இருகுரவருள் அப்பர் சுவாமிகள் திறக் கும்படி பாட, சம்பந்த சுவாமிகள் "சதுரம் மறைதான்" (ப - உ அ உ) என்ற பதிகம் பாடி மூடவும் செய்தார். பிறகு அக்கதவு மற்றைக் கதவுகளைப்போல் திறக்கவும் மூடவும் இசைந்திருந்தது. இருவரும் திருமறைக்காட்டிலேயே சிலகாலம் வீற்றிருந்தார்கள்.

அப்போது ஒருநாள் பாண்டிநாட்டிலிருந்து சில அடியார்கள் வந்து திருஞானசம்பந்தரை வணங்கி "ஐயனே, எங்கள் நாட்டில் சைவம் மறைந்துவிட்டது. சமண சமயமே விளங்குகிறது. மன்னனும் அச்சமயத்திற் புகுந்து சைவத்துக்குக் கேடு விளைவிக்கிறான். குலச் சிறையார் என்ற அமைச்சரும் மங்கையர்க்கரசியார் என்ற பாண்டிமா தேவியாரும் உளம் புழுங்கிச் சைவத்துக்குற்ற குறையை நினைந்து நினைந்து வருந்துகிறார்கள். தங்கள் நல்வருகையை வேண்டுகிறார்கள். தாங்களே சமண சமயத்தைவென்று மீண்டும் சைவத்தை நிலைநாட்ட வல்லவர்கள் என்று திண்ணமாய் நம்புகிறார்கள். தாங்கள் பாண்டி

நாட்டுக் கெழுந்தருளி எங்களைக் காத்தருளல்வேண்டும்" என்று மிகப் பணிவுடன் கூறினார்கள். இதைக்கேட்ட திருஞானசம்பந்தர் அவர்கட்கு அருள்புரிந்து வருவதாக ஒப்புக்கொண்டனர். இதை யறிந்த நாவுக்கரையர் " நீவிர் சிறு பாலர், வயது முதிர்ந்த என்னையே எவ்வளவோ துன்புறுத்தியவர்கள் சமணர்கள். மேலும் இதுபோழ்து நாளும் கோளும் சரியாகவில்லை. போதல்கூடாது " என்று நட்புரிமைபற்றித் திருஞானசம்பந்தரைத் தடுத்தார். " திருவருள்வழி நிற்கும் சிவனடியவர்க்கு நாளும் கோளும் தீமை விளைக்கமாட்டா " என்று கூறி "வேயுறுதோளி பங்கன்" (பக்கம் - ௩௬௬) என்ற பதிகத்தைப் பாடி அப்பரிடம் விடைபெற்று மறைக்காட்டீசனை வணங்கிப் பல தலங்களை வழியிலே தரிசித்துத் திருஞானசம்பந்தர் பாண்டிநாடடைந்தார்.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் மதுரைமா நகரத்தின் எல்லைக்கருகில் வருவதையறிந்த மங்கையர்க்கரசியார் சுவாமிகளை எதிர்கொண்டழைத்தற்காகக் குலச்சிறை நாயனார் என்னும் மந்திரியாரை அனுப்பிவைத்தார். மந்திரியாரும் சென்றழைத்தார். சுவாமிகள் திருவாலவாய் எப்புறமிருக்கிறதென்று வினவினார். கோபுரங்கள் சோலைகளிடையேதோன்றும் பக்கத்தைச் சுட்டினார் குலச்சிறையார்.சுவாமிகளும் "மங்கையர்க்கரசி" (பக்கம்-௬௨அ) என்னும் பதிகத்தைப்பாடித் திருவாலவாயைத் தொழுது உட்புகுந்து திருக்கோயில் சென்று வணங்கி,மங்கையர்க்கரசியாரையும் கண்டு மகிழ்ந்து ஒரு திருமடத்தில் பரிவாரங்களோடு தங்கியிருந்தனர். இராப்பொழுது தொடங்கியதும் சிவனடியார்கள் தமிழ்மறை முழக்கம் தொடங்கினர். அதனைக் கேட்கப் பொறாத சமண அடிகண்மாரெல்லாம் ஒருங்கு சேர்ந்து அரசனிடஞ் சென்று "மதுரையிற் சைவ வேதியர்தாம் மேவலாலின்று கண்டு முட்டியாமென்று" விளம்பினர். "என்று கூறலுங் கேட்டு முட்டியானுமென்றியம்பி" வேந்தன் மேலே செய்யவேண்டுவது யாதெனக் கேட்டனன். சமண அடிகள் அதற்கு "நம்மை வாதில் வெல்லவந்த இவன் தங்கியிருக்கும் மடத்துக்கு மந்திரத்தினால் தீயிடுவதே சாலும்" என்றனர். "அவ்வாறே விரைந்து செய்யுங்கள் " என்றான் அரசன். சமணர்கள் ஓதிய மந்திராக்கினி பஞ்சாக்ஷரத்தின் முன் பயன்படவில்லை. திருமடம் தீப்பற்றவில்லை.இதையறிந்த சமணர்கள் உடனே தீயை யெடுத்துச்சென்று திருமடத்தின் ஒரு பக்கலில் இட்டார்கள்

அப்பக்கம் தீப்பற்றி யெரிந்ததைக்கண்ட அடியவர் திருஞானசம்பந்தரிடம் முறையிட, சுவாமிகளும் "இந்தத் தீ அரசனைமெல்ல அடைந்து அவனுக்கு ஆகவேண்டியவைகளைச் செய்யட்டும்" என்று திருவுளங் கொண்டு "செய்யனே திருவாலவாய்" (பக்கம்-௫௪௯) என்ற பதிகத்தை ஓதியருளினார். உடனே திருமடத்திலிட்ட தீ அணைந்து, வெப்பு நோயாக மாறி, பாண்டிய மன்னனைத் துன்புறுத்தத் தொடங்கிற்று.

அவ்வெப்பு நோய் தாங்கப்பொறாத அரசன் பல வைத்தியர்களையும் சமண மந்திர வாதிகளையும் கொண்டு சிகிச்சை செய்து கொண்டும் நோய் ஒரு சிறிதும் குறையாததை யுணர்ந்து தனது அரசியாரையும் மந்திரி குலச்சிறையாரையும் வரவழைத்து விசாரித்தான். திருஞான சம்பந்த சுவாமிகள் மடத்துக்கிட்ட தீயினால் தான் இவ்வெப்புநோய் வந்ததென்றும், அந்தச் சுவாமிகளே இந்நோயைத் தீர்க்க வல்லாரென்றும் அவர்கள் கூறினார்கள். மன்னனும் ஆங்குக் கூடியிருந்த சமணர்களை நோக்கி "இவர் செய்கையெல்லாம் இன்னவாறெய்து நோய்க்கே யேதுவாயின வென்றெண்ணி", "யானுற்ற பிணியைத் தீர்த்து வென்றவர் பக்கஞ் சார்வன்" என்று கூறித் திருஞானசம்பந்தரை அழைத்து வரும்படி மந்திரியாருக்குக் கட்டளையிட்டான். உடனே குலச்சிறையார் திருமடம் சென்றழைத்தார். சுவாமிகள் கோயிலுக்குள் சென்று "காட்டுமாவ துரித்து," "வேத வேள்வியை நிந்தனை" (பக்கம் - ௫௦௮, ௬௦௧) என்ற பதிகங்களை ஓதி இறைவன் திருவுள்ளத்தை யறியவேண்டி நின்றார். உடனே "நாதர் தம்மருள் முன்பெற்று நாடிய மகிழ்ச்சி பொங்கப் போதுவார் பணிந்து போற்றி விடைகொண்டு" திருநீற்றின் கோலத்தோடு அரண்மனை வாயிலை அடைந்தார். உடனே குலச்சிறையாரும் மங்கையர்க்கரசியாரும் சுவாமிகளை வரவேற்று அரசனிடம் அழைத்துச் சென்றார்கள். அரசனும் சுவாமிகளைக் கைகூப்பி வணங்கித் தன் தலைப் பக்கத்தில் ஒரு பொற்பீடத்திலிருக்கச் செய்தான். தங்கள் ஊர் எது வென்று சுவாமிகளை அரசன் வினவ, சுவாமிகள் "பிரமனூர் வேணுபுரம்" (பக்கம்-௬௫௦) என்ற பதிகமோதி ஸ்ரீகாழியின் பன்னிரு பெயர்களையும் தெரிவித்தனர்.

சமணர்கள் வாதில்வெல்ல எண்ணி "கோலு நூலெடுத்தோதித் தலை திமிர்ப்பக் குரைத்தார்கள்." சுவாமிகள் "பேசுதிர் நும் பொரு

ளெல்லை யுள்ளவாறு" என்றூர். உடனே சமணர்கள் "துள்ளி யெழுந்தனேகராய்ச் சூழ்ந்து பதறிக் கதற", மங்கையர்க்கரசியார் இவ் விளம் பிள்ளையைத் துள்ளியெழும் குண்டர்கள் யாது செய்வார்களோ வென்று அஞ்சினூர். இது கண்ட சுவாமிகள் "மானினேர் விழி" (பக்கம் - சகசு) என்ற பதிகம் பாடி அரசியாரைத் தேற்றினூர். அரச னும் சமணர்களை நோக்கி "வேறுவா தென்கொல் என்மேல் வெப் பொழித்து" "நீங்கள் தேறியதெய்வத்தன்மை யென்னிடைத் தெரிப் பீரென்றூன்." சமணர்கள் அரசனது இடப் பக்கத்துள்ள வெப் பத்தை மந்திரத்தால் நீக்குவதாகக் கூறி, முயன்று தோற்றூர்கள். உடனே அரசன் திருஞானசம்பந்தரை நோக்க, சுவாமிகள் இறை வனை நினைந்து "மந்திரமாவது நீறு" (பக்கம்-ருநரு) என்னும் திருப் பதிகத்தைப்பாடித் தமது கையால் மன்னன் வலதுபக்கத்தில் திருநீறு பூசினூர். உடனே வலதுபக்கத்திலிருந்த வெப்பம் நீங்கித் தடாகம் போல் குளிர்ந்தது. அவ்வெப்பம் இடதுபக்கம் சென்று இரட்டித் தது. அப்பக்கலில் நின்ற சமணர்களையும் அவர்கள் கையிலிருந்த மயிற்பீலிகளையும் சுட்டது. அரசன் அவர்களை நோக்கி "நீங்கள் தோற்றீர்கள், செல்லுங்கள்" என்றுகூறி, சுவாமிகளை நோக்கி வெப்பு முழுமையும் நீங்குமாறருளவேண்டினூன். சுவாமிகளும் மற்றொரு முறை திருநீற்றைத் தடவி அவ்வெப்பு நோயை முழுமையும் போக் கினூர். அரசன் சுவாமிகளை வணங்கினூன். ஏசற்ற சமணர்கள் தீயில் நீரில் வெல்வதென்றெண்ணினூர்கள். இதையறிந்த சுவாமிகள் "உங்கள் வாய்மை பேசுமின்கள்" என்று வாதுக்கழைத்தார். சமணர் கள் "தருக்கவாதம் வேண்டாம். கண்ணுக்குப் புலனுகும் வாதத்தால் வெல்வோம்" என்று கூறித் தத்தம் சமயவுண்மையை ஏட்டிலெழுதித் தீயிலிட்டு, பச்சென்றிருக்குமேடு வென்றதாகவும் எரிந்தஏடு தோற்ற தாகவும் கொள்வோமென்றூர்கள். சுவாமிகளும் இதற்கு உடன்பட் டார்கள். உடனே தமது பதிகங்கள் எழுதப்பெற்ற ஏட்டுப்புத்தகத்தை யெடுத்துக் கயிறுசாற்ற "போகமார்த்த பூண்முலையாள்" (பக்கம்·அக) என்ற திருநள்ளாற்றுப்பதிகம் கிடைத்தது. அவ்வேட்டைக் கையி லெடுத்து நள்ளாறரை நினைந்துவணங்கித் "தளிர்இள வளரொளி...... நள்ளாறர் நாமமே, மிளிர்இளவளர் எரியிடிலிவை பழுதிலை மெய்ம் மையே" (பக்கம் - ருஎசு) என்ற பதிகத்தைப்பாடி அனைவரும் காணத்

தீயிலிட்டனர். அவ்வேடு வெந் தெரியாது பச்சையாய் விளங்கிற்று. சமணர்கள் தங்கள் பொருள் வரைந்த ஏட்டை உய்யுமோ என்ற அச்ச மிகுதியோடு தீயிலிட்டார்கள். அது பஞ்சு தீயினிற்பட்டதுபோல் வெந்து சாம்பலாயிற்று. இதைக் கண்ட சமணர்கள் "இருமுறை போதாது, மூன்ரும் முறை வாது செய்தல் வேண்டும்" என்ருர்கள். சுவாமிகள் "இனி என்னவாது செய்வது?" என்ருர். "தத்தம் சமய வுண்மைகள் எழுதப் பெற்ற ஏடுகளை ஆற்றில்விட்டால், நீரோட் டத்தோடு ஓடுவது தோற்றது, நிற்பது வென்றது" என்ருர்கள். சுவாமிகளும் "நன்று செய்வோ" மென்றனர். இதற்குள் குலச் சிறையார் "இம்முறை தோற்ருரை என் செய்வ"தென்ருர். உடனே கோபமும் பொருமையுங் கொண்ட சமணர்கள் "தங்கள்வாய் சோர்ந்து தாமேதனிவாதி லிழந்தோமாகில், வெங்கழு வேற்றுவானிவ் வேந்தனே" யென்று சொன்ஞர்கள். இதைக்கேட்ட மன்னன் "செற் றத்தா லுரைத்தீ ருங்கள் செய்கையு மறந்தீரென்று" கூறி வைகை ஆற்றில் ஏடுகளை இடும்படி ஏவிஞன். சமணர்கள் "அத்தி நாத்தி" என்றெழுதிய ஏட்டை ஆற்றிலிட்டார்கள். உடனே அது ஆற்ருேட் டத்தோடு விரைந்து கடலுக்குச் சென்றது. இதைக் கண்ட சமணர் கள் தங்கள் தோல்வியையும் அச்சத்தையும் மறைப்பார் போல் "உங் கள் ஏட்டையும் ஆற்றிலிட்டால் தானே தெரியும்" என்று திரு ஞானசம்பந்தரைக் கேட்டார்கள். சுவாமிகளும் "வாழ்க அந்தணர்" (பக்கம் - ருகக) என்னும் பதிகத்தை ஓர் ஏட்டி லெழுதிக் கடவுளை நினைந்து ஆற்றிலிட்டார். அவ்வேடு "மருவுறும் பிறவி யாற்றில் மாதவர் மனம் சென்ருற்போல்" எதிர்ந்து நீர்கிழித்துச் சென்றது. அதை யெடுப்பதற்குக் குலச்சிறையார் ஒரு குதிரை மீதேறி விரைந் தோடிஞர். சுவாமிகள் "வன்னியுமத்தமும்" (பக்கம் - சஅரு) என்ற பதிகம் பாடிஞர். ஓடுகின்ற ஏடு நின்று குலச்சிறையார் கையில் கட் டாற்றிற் கிடைத்தது. அவ்வேடு தங்கிய இடமே திருவேடக மாயிற்று. குலச்சிறையார் அவ்வேட்டைக் கொண்டு வந்து அரசன் முதலானவர்கட்குக் காட்டிஞர். அரசனும் "முன்னமே பிள்ளையார் பால் அனுசிதம் முற்றச் செய்த" சமணர்களை "அவர்கள் ஒப்புக் கொண்டபடி கழுவி லேற்றி முறை செய்க" என்று மந்திரியாருக் குக் கட்டளையிட்டான். இதைக்கேட்ட திருஞானசம்பந்தர் "இகலில

ரெனினும் சைவரிருந்து வாழ் மடத்திற்றீங்கு, தகவிலாச் சமணர் செய்த தன்மையாற் சாலுமென்றே, மிகையிலா வேந்தன் செய்கை விலக்கிடாதிருந்தார்." மடத்தில் தீ வைத்த எண்ணாயிரம் சமணர் களும் கழுவேறினார்கள். திருஞானசம்பந்தர் கொடுக்கவாங்கி மன்னன் திருநீறணிந்தான். "வேந்தனும் ஓங்குக" என்ற அளவில் தன்கூன் நிமிர்ந்தான். நாட்டுள்ளார் அனைவரும் திருநீறிட்டுச் சைவராயினர். திருநீற்றின் விளக்கத்தால் அமணிருள் பாண்டி நாட்டில் மாய்ந்தது.

பிறகு திருஞானசம்பந்தர் பாண்டி நாட்டுத் தலங்களைத் தரிசித்துச் சோழநாடு போந்து பல தலங்கள் சென்று காவிரிக்கரையை யடைந்து எதிரேயுள்ள திருக்கொள்ளம்பூதூர் செல்வதற்கு ஓடமேறி ஓடம் விடுவாரின்றி, "கொட்டமே கமழும்" (பக்கம்-சசசச) என்னும் பதிகம் பாடி ஓடம் தானாகச் செல்ல, அக்கரைசென்று வணங்கிப் பல தலங்களைத் தரிசித்துக்கொண்டு போதிமங்கை என்ற சமணர்கள் வாழூமூருக்கருகில் வந்தார். பரிவாரங்கள் அரன்நாமத்தை முழக்கினர். புத்த நந்தி என்பான் இதைப் பொறாது வெகுண்டு எதிர்த்தான். உடனே சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளும் பதிகங்களை அவ்வப் போது எட்டிலெழுதும் அன்பர் (இவர் சுவாமிகளின் நல்லம்மானாகிய சம்பந்த சரணாலயர் என்று கூறுவது வழக்கு) "புத்தர் சமண்கழுக் கையர்" (பக்கம்-சஎக) என்ற பஞ்சாக்கரப் பதிகத்து அமண் பாட்டைப்பாடி இவன் தலையில் இடிவிழுகவென்ற அளவில் இடிவிழுந்து புத்தநந்தி இறந்தான். இவ்வன்பரே அங்குள்ள சமணர்களோடு வாதம் செய்தும் வென்றார்.

பிறகு பல தலங்களைத் தரிசித்து அப்பர் சுவாமிகளைக் காண வேண்டி, திருஞானசம்பந்தர் திருப்பூந்துருத்தியை யடைந்தார். அப்பர் சுவாமிகள் ஒருவருங் காணாதபடி முத்துச் சிவிகையைத் தாங்குவோருடன் கலந்து தாங்கினார். சுவாமிகள் 'அப்பர் எங்கே?' யென வினவ, அப்பர் சுவாமிகளும் 'தங்கள் சிவிகையைத் தாங்கும்பாக்கியம் பெற்றிங் குற்றேன்' என்றார். உடனே பிள்ளையார் சிவிகையி னின்று மிழிந்தார்- இருவரும் ஒருவரையொருவர் வணங்கி மகிழ்ந்து சில நாள் அங்கேயே தங்கி யிருந்தனர். பாண்டி நாட்டுச் செய்திகளை யெல்லாம் அப்பர் சுவாமிகள் திருஞானசம்பந்தரிடம் நேரிற் கேட்டறிந்தார். தாம் தொண்டை நாட்டுத் தலங்களைத்

தரிசித்த செய்தியைத் தெரிவித்தார். பிறகு திருஞானசம்பந்தர் சில தலங்களைத் தரிசித்துத் தொண்டைநாட்டுக்குச் சென்றார்.

திருவோத்தூரில் ஒரு சிவனடியார் வைக்கும் பனைமரங்களெல்லாம் ஆண்பனைகளாகக் காயாது நிற்பதைக்கண்ட அமணர்கள் அவரை இகழ்ந்தார்கள். அவர் திருஞானசம்பந்தரிடம் சென்று வணங்கித் தமக்கருள் புரியுமாறு வேண்டினார். சுவாமிகள் "பூத்தேர்ந்தாயன" (பக்கம் - அக) என்ற பதிகம்பாடி ஆண் பனைகளைப் பெண் பனைகளாக்கினார். இதுகண்ட சமணர்கள் நாட்டைவிட்டகன்றனர். பிறகு பல தலங்களைத்தரிசித்துக்கொண்டு சுவாமிகள் திருக்காளத்தி சென்று வணங்கி ஆங்கிருந்தே கயிலாயம், கேதாரம், கோகர்ணம், இந்திரநீல பருப்பதம், பருப்பதம், அநேக தங்காபதம் என்ற தலங்களை நினைந்து பதிகம்பாடி திருவேற்காடு,திருவலிதாயம் என்ற தலங்களை வணங்கித் திருவொற்றியூரடைந்து பதிகம் பாடி ஆங்கே தங்கியிருந்தார்.

திருமயிலாப்பூரில் சிவநேசர் என்ற பெருவணிகர் ஒருவர் இருந்தார். அவருக்குப் பூம்பாவை யென்ற ஒரேபெண் இருந்தாள்.மதுரையில் திருஞானசம்பந்தர் சமணரை வென்ற செய்தி முதலியவற்றைக் கேட்ட சிவநேசர் "எனது பெண்ணையும் பொருளையும் திருஞானசம்பந்தருக்கே அர்ப்பணம் செய்தேன்" என்றார். பூம்பாவை கன்னிமாடத்தில் பூக்கொய்யும்போது பாம்பு கடித்திறந்தாள். புகலியர்கோனுக்கர்ப்பணம் செய்யப்பெற்ற கன்னிகையை அன்னாரிடமே ஒப்புவிக்க வேண்டுமெனக் கருதிப் பூம்பாவைக்கு ஈமக்கடன் முடித்து எலும்புகளையும் சாம்பலையும் ஒரு குடத்திலடைத்துக் கன்னிமாடத்தில் வைத்துப் பூசித்துத் திருஞானசம்பந்தர் வருகையைச் சிவநேசர் எதிர்நோக்கியிருந்தார். சுவாமிகள் திருவொற்றியூரடைந்ததைத் தெரிந்து "திருவொற்றியூரளவுந் துன்னுநீள் நடைக்காவணந் துகில் விதானித்து" இன்னம் பலவகையில் ஊரை அலங்கரித்துத் திருஞானசம்பந்தரைச் சிவநேசர் அழைத்துவந்தார். திருமயிலாப்பூரையடைந்து சுவாமிகள் திருக்கோயிலை வணங்கி இறைவன் திருமுன்பு நின்று என்புக் குடத்தைத் திருமதிற்புறவாயிலில் கொண்டு வருமாறு சிவநேசருக்குக் கட்டளையிட்டார்.குடமும் அவ்வாறே கொண்டு வந்து வைக்கப்பட்டது. உடனே திருஞானசம்பந்தர் இறைவன் திருவருளை நினைந்து "மட்டிட்டபுன்னை" (பக்கம் - உகக) என்னும் பதிகத்

தைப் பாடத் தொடங்கினார். அப்பதிகத்தில் "போதியோவென்னும், அன்னமெய்த் திருவாக்கெனும் அமுதம் அவ்வங்கம், அன்னவர்ந்து வந்துருவமாய்த்தொக்கதக்குடத்துள்." சுவாமிகள் சமண்பாட்டைப்பாடும்போது "கோற்றொடிச் செங்கை தோன்றிடக்குடமுடைந்து" எழுந்தாள் அங்கம்பூம்பாவை. பின்னர்ச் சுவாமிகள் திருக்கடைக்காப்பையும் பாடியருளினார். இவ்வதிசயத்தைக் கண்டோரனைவரும் இறைவன் திருவருளை வியந்தனர். புறச்சமயத்தினர் கண்டு நடுங்கினர். தமக்கென்றே அர்ப்பணஞ் செய்யப்பெற்ற பூம்பாவையை மணந்து கொள்ளுமாறு திருஞானசம்பந்தரைச் சிவநேசர் வேண்டினார். "மற்றவர் தமக்கு வண்புகலி வாணர் நீர், பெற்ற பெண் விடத்தினால் வீந்த பின்னையான் கற்றைவார் சடையவர் கருணை காண்வர, உற்பவித்தலாலுரை தகாதென" மொழிந்தார். "அவ்வாறாயின் தங்களுக்கென்றர்ப்பணஞ் செய்த பாவையை மற்றெவர்க்கும் மணஞ் செய்விக்கேன்" என்று அங்கம்பூம்பாவையைக் கன்னிமாடத்திலேயே அமர்த்தினார் அவர் தந்தை. பூம்பாவையும் சிவத்தை மேவினாள்.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருமயிலாப்பூரிலிருந்து திருவான்மியூர் முதலிய பல தலங்களைத் தரிசித்துக்கொண்டு சீகாழியையடைந்தார். ஆங்கு சிவபாத இருதயரும் அவர் உறவினரும் திருஞானசம்பந்தருக்குத் திருமணம் முடிக்கவேண்டுமென்ற கருத்தைத் தெரிவித்தார்கள். சுவாமிகள் இசையாது மறுத்தார். மீண்டும் அவர்கள் "வேதநெறியை நிலைநாட்டவந்த தேவரீர் வேள்விக்குத் துணை புரியும் பொருட்டு ஒரு கன்னிகையை மணந்தருளல்வேண்டும்" என்று பணிவுடன் வேண்டினர். சுவாமிகள் அவ்வேண்டுகோளுக் கிணங்கினார். திருநல்லூர்ப் பெருமணத்தில் (இதுவே ஆச்சாபுரம்) வாழும் நம்பாண்டார் நம்பியின் திருமகளைப் பேசி முடித்துத் திருமணத்துக்குரிய ஏற்பாடுகளையும் அவ்வூரிலேயே செய்து முடித்தார்கள். திருநீலநக்க நாயனார் வேதவிதிப்படி திருமணவினைச் சடங்குகளைச் செய்தனர். மங்கல வாழ்த்தொலி முழங்கத் திருஞானசம்பந்தர் காதலியைக் கைப்பற்றினர். அக்கினியை வலம் வரும்போது அக்கினி யாவார் சிவபெருமானே என்றெண்ணி, "இந்த இல்லொழுக்கம்வந்து சூழ்ந்ததே இவள் தன்னோடும், அந்தமில் சிவன்தாள் சேர்வன் என்னும் ஆதரவு பொங்க" சுற்றத்தாரும் தொண்டர்குழாங்களும் புடை

சூழத் திருக்கோயிலை யடைந்தார். "கல்லூர்ப் பெருமணம்" (பக்கம் - கூஅ) என்ற பதிகத்தை ஓதினார். உடனே சிவபெருமான் "காதலி யும் நீவிரும் திருமணங்காண வந்தாரனைவரும் நம்பாற் சோதியிற் கலமின்" என்று திருவருள் செய்து திருக்கோயில் முழுமையும் அனைவரும் செல்லும்வரை சோதிமயமாக்கி அதில் ஒரு வழியையும் வகுத்தருளினார். சுவாமிகள் "காதலாகிக் கசிந்து" (பக்கம் - ருகக) என்ற நமச்சிவாயப் பதிகத்தை யோதி அனைவரையும் சோதியுட் செல்லும்படி கட்டளையிட்டார். உடனே திருநீலநக்கர், திருநீல கண்ட யாழ்ப்பாணர், முருகநாயனார், சிவபாத விருதயர், நம்பாண் டார்நம்பி முதலிய அனைவரும் சோதியிற் கலந்தார்கள். எல்லாரும் புகுந்த பின்னர், வைகாசிமூல நன்னாளிலே,

"காதலியைக் கைப்பற்றிக் கொண்டுவலங் கொண்டருளித்
தீதகற்ற வந்தருளும் திருஞான சம்பந்தர்
நாதனெழில் வளர்சோதி நண்ணியத னுட்புகுவார்
போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றி யுடனானார்."

திருச்சிற்றம்பலம்

---

"காழிநகர்ச் சிவபாத விதயர் தந்த
கவுணியர்கோன் அழுதுமையாள் கருதி யூட்டும்
ஏழிசையின் அமுதுண்டு தாளம் வாங்கி
இலங்கியநித் திலச்சிவிகை இசைய வேறி
வாழுமுய லகனகற்றிப் பந்த ரேய்ந்து
வளர்கிழிபெற் றரவின்விடம் மருகல் தீர்த்து
வீழிநகர்க் காசெய்தி மறைக்கதவம் பிணித்து
மீனவன்மே னியின்வெப்பு விடுவித் தாரே"

"ஆரெரியிட் டெடுத்தவே டவைமுன் னேற்றி
ஆற்றிலிடும் ஏடெதிர்போ யணைய வேற்றி
ஓரமண ரொழியாமே கழுவி லேற்றி
ஓதுதிருப் பதிகத்தால் ஓட மேற்றிக்
காருதவும் இடிபுத்தன் தலையி லேற்றிக்
காயாத பனையின்முது கனிக ளேற்றி
ஈரமிலா அங்கமுயி ரெய்த வேற்றி
இலங்குபெரு மணத்தரனை யெய்தி னாரே"

# திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளைப்பற்றிய

# சில குறிப்புகள்

(க) **சுவாமிகள் திருப்பெயர்கள் :**—(1) பிறந்த ஊர்பற்றிக் காழி மன்னன், புகலியர்கோன், வெங்குருவேந்தன், தோணிபுரத் தோன்றல் முதலியனவும் (2) கோத்திரம்பற்றிக் கவுணியர்தங்குலதீபம்முதலியனவும் (3) ஞானப்பாலுண்டமைப்பற்றித் திருஞானசம்பந்தர், ஞானபோனகர், பாலறாவாயர் முதலியனவும் (4) பார்வதிதேவியார் குழந்தைக்குப் பால்தந்தமையாலும் சிவபெருமான் குமாரனாக எண்ணிப் பல திருவருள்கள் புரிந்தமையானும் ஆளுடையபிள்ளையார், புரமெரித்தார் திருமகனார், தெய்வஞானக்கன்று முதலியனவும் (5) புறச்சமயிகளை வென்றமையால் பரசமயகோளரி முதலியனவும் (6) மறைநெறிச் சைவத்தை நிலைநாட்டினமையால் மாமறைச்சிறுவர், சைவமைந்தர் முதலியனவும் (7) செந்தமிழ் மறையோதினமையால் முத்தமிழ் விரகர் முதலியனவும் பிறவும் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளின் சிறப்புப் பெயர்களாகும்.

(உ) **சுவாமிகள் காலம் :**—பல கல்வெட்டு முதலிய சரித்திரச் சான்றுகளின் துணைகொண்டு சுவாமிகளின் காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பாதி (கி. பி. 601—650)யிலுள்ளதெனை ஆராய்ச்சியாளர்கள் முடிவு கூறுகின்றனர்.

(ஙு) **சுவாமிகள் வயது :**—ஈரமிலா அங்கமுயிர் எய்தவேற்றிய இறைவன் கருணையைச் சுவாமிகள் வியந்ததைப் "புண்ணியப் பதினாறாண்டு பேர்பெறும் புகலிவேந்தர், கண்ணுதல் கருணைவெள்ளம் ஆயிர முகத்தாற் கண்டார்" எனச் சேக்கிழார் கூறுகிறார். அங்கம் பூம்பாவை அற்புதம் நிகழ்ந்தவுடன் சுவாமிகள் சீகாழிசென்று திருமணம் புரிந்துகொண்டு சோதியிற் கலந்ததே நிகழ்ந்ததால் சுவாமிகளின் வயது பதினாறென்றே துணியப்படும்.

(ச) **சுவாமிகள் தேவாரத் தொகை :**—இது பதினாறாயிரம் பதிகமென நம்பியாண்டார்நம்பி கூறுகின்றார். இப்போதுள்ளவை சமீபத்தில் கல்வெட்டொன்றிற் காணப்பட்ட திருவிடைவாய்ப் பதிகத்தையும் சேர்த்து, ஙஅச.

(ரு) **சுவாமிகள் தேவாரத்திற் கூறியுள்ள செம்பொருள் :—** சைவசித்தாந்த சமயத்திலுள்ள சிறந்த கொள்கைகளனைத்தையும் சுவாமிகள் தேவாரத்திற் காணலாகும். விரிக்கில் மிகப்பெருகும். சுருங்கக்கூறின், புறக்கண் கொண்டு நோக்குவார்க்குப் பல சரிதச் சான்றுகள், இயற்கைவனப்பு, இசைநுட்பம், நாட்டின் நிலை, மக்கள் நிலை, பழக்க ஒழுக்கங்கள், செய்யுள் நயம், அகத்துறைப்பாடலினிமை முதலிய பொருள்களும் அகக்கண் கொண்டு நோக்குவார்க்கு இறைவன் திருவருள் நெறியென்ற செம்பொருளும் காணப்படும்.

(சா) **சுவாமிகள் அவதாரபுருஷரா ? :—**முருகப் பெருமான் திருவவதாரமாகத் திருஞானசம்பந்தரைக் கொள்வது ஒருவகை வழக்கு. அருணகிரிநாதர் பாடல்கள் பல இவ்வழக்கை விளக்குகின்றன. "பெம்மான் முருகன் பிறவான் இறவான்" என்ற உண்மைச் சைவக்கொள்கையுடையோர் திருமால் பத்து அவதாரங்களைப்போல் முருகன் அவதரித்ததாக ஒப்புக்கொள்ளார், உபசாரமாகவேகொள்வர்.

(எ) **சுவாமிகள் காலத்தும் முன்னும் இருந்த நாயன்மார்கள் :** அறுபத்து மூன்று நாயன்மார்களுள் சண்டீசர், கண்ணப்பர், நமிநந்தியடிகள், கோச்செங்கட்சோழர், முருகநாயனார், சிறுத்தொண்டர், நீலநக்கர், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார், திருநீலகண்டயாழ்ப்பாணர் ஆகிய பதின்மரைப் பற்றித் தமது தேவாரத்திலேயே சுவாமிகள் பாடியுள்ளார்கள். இவர்களுள் பின்னர் கூறப்பட்ட அறுவரும் சுவாமிகளைக் கண்டு அவரோடிருந்து அளவளாவிய சீலர்கள். இவ்வறுவரே யன்றித் திருநாவுக்கரசு சுவாமிகளும், குங்குலியக்கலயரும், நின்றசீர் நெடுமாறனும் சுவாமிகளைக் கண்டு இன்புற்றவர்களாவார்கள்.

(அ) **சுவாமிகள் சமய குரவராவார் :—**சுவாமிகள் பாண்டிநாட்டில் சமணரைவென்று சைவத்தை நிலைநாட்டாவிடில் " நீறெங்கே மாமறை நூல்தானெங்கே எந்தைபிரான் ஐந்தெழுத் தெங்கே" என்ற வினாக்களுக்கு இல்லையென்ற விடையே பகரவேண்டியிருக்கும். எனவே, சுவாமிகள் நம் சமயத்துக்குக் காலத்தாற் செய்த உதவி ஞாலத்தின் மாணப்பெரிதே யாகும். மேலும் சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத்தில் சைவ சமயக் கொள்கை நுட்பங்களை

யெல்லாம் ஒருங்கே காணலாகும். ஆகையால் சுவாமிகளைச் சைவ சமயாசாரியர்கள் நால்வரில் ஒருவராகக் கொள்வது ஆன்றோர் முடிபு.

(௯) **சுவாமிகள் நால்வருள் யாவர் ?:**—சைவ சமயத்தில் இறைவன் திருவருளை யடைவதற்கு நான்கு சாதனங்கள் கூறப்பட்டுள்ளன. அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பனவாகும். இவற்றையே தாச மார்க்கம், சத்புத்ர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்பர் வடமொழியாளர். இவற்றுள் திருஞானசம்பந்தர் கிரியையென்ற சத்புத்ர மர்க்கத்தை வற்புறுத்தும் சமய குரவர். அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற ஏனைய மூன்று சமய குரவரும் முறையே சரியை, யோகம், ஞானம் என்ற சாதனங்களை வற்புறுத்தும் சிறப்பினர் என்பது திருமுறை ஆராய்ச்சியாளர் துணிபு.

(௧௦) **சுவாமிகள் வரலாறுகளும் புகழ்மாலைகளும் :**—திருநாவுக்கரசர், சுந்தரர் தேவாரங்களில் சில குறிப்புக்களும், நம்பி யாண்டார் நம்பிகளியற்றிய புகழ்மாலைகளும் புராண சாரமும், சேக்கிழார் இயற்றிய பெரிய புராணமும், பிற்காலத்தவர் இயற்றிய பிள்ளைத் தமிழ் முதலியபலவும் சுவாமிகளைப்பற்றிய வரலாறுகளும் புகழ்மாலைகளுமாகும். சில ஆண்டுகளுக்கு முன்னர் திரு. கா. சுப்பிரமணியம் பிள்ளை யவர்களியற்றிய சரித்திரமும், திரு. சே. சிவஞானம் பிள்ளை யவர்களியற்றிய சரித்திரமும் ஆராய்ச்சிக் குறிப்புகள் பலவும் மிகச் செவ்வையாக எழுதப்பட்டனவாகும்.

---

### நால்வர் திருநக்ஷத்திரம்

சித்திரைச் சதயமப்பர் சிறந்தவை காசிமூலம்
அத்தரைப் பணிசம்பந்த ரானிமா மகத்திலந்த
முத்தமிழ் வாதவூரர் முதியநல் லாடிதன்னிற்
சுத்தமாஞ் சோதிநாளிற் சுந்தரர் கயிலைசேர்ந்தார்.

---

குறிப்பு:—இச்சரிதமும் குறிப்புகளும் சைவசித்தாந்த மகா சமாஜக்காரியதரிசியும், "சித்தாந்தம்" பத்திராசிரியரும், சென்னை உயர்தர நீதிமன்ற வழக்கறிஞருமாகிய திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார், பி.ஏ.,பி.எல். அவர்களால் எழுதப் பெற்றன.

சிவமயம்

# அரும்பொருளகராதி

[திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார், பி. ஏ., பி. எல்.
அவர்களால் தொகுக்கப்பெற்றது]

[குறிப்பு:—இவ்வகராதியில் பற்பல அரும்பொருள்கள் தொகுக்கப்பட்டுள்ளன. விரிவஞ்சிப் பற்பல குறிப்புக்களும் பொருள்களும் விடப்பட்டன. சில பொருள்களுக்கு எல்லாப் பதிகக் குறிப்புக்களும் தரப்பட்டுள்ளன. இவ்வகராதியை அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொருவரும் பெருக்கிக்கொள்ளவேண்டும். ஒவ்வொரு குறிப்பிலும் தரப்பட்டுள்ள மூன்று எண்கள் முறையே திருமுறை, பதிகம், பாட்டு எண்களாகும். உதாரணமாக அகச்சமயிகள் என்ற தலைப்பில் 1. 66. 4 என்று குறிப்பிட்டுள்ளது. முதல் திருமுறையில் 66-வது பதிகத்தில் 4-வது பாட்டில் "காதலாற் சைவர்...சண்பை நகர்" என்ற சொற்றொடர் உள்ளதென்பதை இது குறிக்கும்.

அகச்சமயிகள்

காதலாற் சைவர் பாசுபதர்கள் வணங்கும் சண்பை
நகர் ... 1. 66. 4

அகச்சான்றுகள் (சம்பந்தர் சரித்திரச் சான்றுகள்)

**அரசருடன் வழிபட்டு அவர்களை ஆசீர்வதித்தது**

தென்னவன் செம்பியன் வில்லவன் சேருமீக்கீச்ச
ரத்தடிகள் செய்கின்றதோர் செம்மையே ... 2. 120. 9
மல்லையார்மும்முடி மன்னர் மூக்கீச்சரத்தடிகளைச்
செல்வராக நினையும்படி சேர்த்திய செந்தமிழ் ...2. 120. 11

**ஆண்பனை குலையீன்றது**

குரும்பை ஆண்பனை ஈன்குலை ஓத்தூர் ... 1. 54. 11

**இறைவனை யாசித்துப் பொன் பெற்றது**

இதுவோ வெமையாளுமாறு ஈவதொன்றெமக்கில்லை
யேல் அதுவோ உனதின்னருள் ...3.4.(1-10)

அகச்சான்றுகள் (சம்பந்தர் சரித்திரச் சான்றுகள்)

**இறைவனை யாசித்துப் பொன் பெற்றது**

*ஞானசம்பந்தன் சொன்ன விலையுடை தமிழ் மாலை...* 3. 4. 11

**ஏடு ஆற்றில் எதிர் சென்றது**

*ஓலை தெண்ணீர்பற்றின்றிப் பாங்கெதிர்வினூரவும் ...*3. 54. 11
*பருமதில் மதுரைமன் அவையெதிரே பதிகம*
*தெழுதிலை யவைஎதிரே வருநதியிடை* ...3. 113. 12

**ஏடு எரியிலிட்டது**

*நள்ளாறர் தம் நாமமே மிளிர் இளவள ரெரியிடில்*
*இவை பழுதிலை மெய்ம்மையே* ... 3. 87. 1
*கொற்றவன் எதிரிடை எரியினில் இட இவைகூறிய*
*சொற்றெரி ஒருபதும்* ... 3. 87. 11

**ஓடம் விட்டது**

*ஓடம்வந் தணையுங் கொள்ளம் பூதூர்*
*ஆடல் பேணிய அடிகளை யுள்கச்*
*செல்ல வுந்துக சிந்தை யார்தொழ*
*நல்கு மாறருள் நம்பனே.* ... 3. 6. 6

**கதவடைக்கப் பாடியது**

*அருள் செய்க எனக்குன் கதவந் திருக்காப்புக் கொள்*
*ளும் கருத்தாலே* ... 2. 37. 1

**சமணரைத் திருநீறு அழிவிக்கு மென்றுறுதி கூறியது**

*புத்தரொடமணை வாதில் அழிவிக்கும் அண்ணல் திரு*
*நீறு செம்மை திடமே* ... 2. 85. 10

**சமணரை யழித்தது**

*தேரமண் சிதைவு செய்திரே தேரமண் சிதைவு செய்*
*தீருமைச் சேர்பவர் ஆர்துயர் அருவினை யிலரே ...* 3. 95. 10
*ஆலவாய்த் தேரமண் செற்றவீர னென்பரே* ... 1. 94. 10

**சமணரோடு வாது செய்தது**

*அமணொடு தேரரை வாதில் வென்றழிக்கத் திருவுள்*
*ளமே...ஆலவாயிலுறையுமெம் ஆதியே* ... 3. 108. 1
*அமணரை வாட்டிட* ...3.108. 11
*ஓதி யோத்தறி யாஅமண் ஆதரை*
*வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே*
*ஆதி யேதிரு ஆலவா யண்ணலே*
*நீதி யாக நினைந்தருள் செய்திடே* ... 3. 47. 4

அகச்சான்றுகள் (சம்பந்தர் சரித்திரச் சான்றுகள்)

**சமணர் இட்டதீ பாண்டியர்க்காயது**

*அமணர் கொளுவுஞ் சுடர் பையவே சென்று பாண்டியற்காகவே* ... 3. 51. 1

*தஞ்ச மென்றுன் சரண்புகுந் தேனையும்*
*அஞ்ச லென்றருள் ஆலவா யண்ணலே*
*வஞ்சஞ் செய்தம ணர்கொளு வுஞ்சுடர்*
*பஞ்ச வன்தென்னன் பாண்டியற் காகவே* ... 3. 51. 6

*அப்பன் ஆலவா யாதி யருளினால்*
*வெப்பந் தென்னவன் மேலுற மேதினிக்*
*கொப்ப ஞானசம் பந்தன் உரைபத்தும்*
*செப்ப வல்லவர் தீதிலாச் செல்வரே* ... 3. 51. 11

**ஞானப்பாலுண்டது**

*போதையார் பொற்கிண்ணத் தடிசில் பொல்லா தெனத் தாதையார் முனிவுறத் தானெனையாண்டவன்* ... 3. 24. 2

**தந்தையார் தோள்மீதிருந்து பாடியது**

*இடபறை ஒன்ற அத்தர் பியல்மே லிருந்து இன்னிசையா லுரைத்த பனுவல்* ... 2. 84. 11

**பாண்டியன் சுரந் தீர்த்தது**

*தென்னனுடலுற்ற தீப்பிணியாயின தீரச்சாற்றிய பாடல்கள்* ... 2. 66. 11

**பாண்டிமாதேவிக்குத் தைரியங் கூறியது**

*வழுதிக்கு மாபெருந் தேவிகேள் பால்நல்வா யொரு பாலன் ஈங்கிவன் என்று நீ பரிவெய்திடேல்* ... 3. 39. 1

*துளங்கும் முடித்தென்னன் முன்னிவை...உரை செய்த பத்தும்* ... 3. 39. 11

**முத்திவேண்டி நின்றது**

*இன்று நல்லூர்ப் பெருமணம் புக்கிருந்தீர் எமைப் போக்கருளீரே* ... 3. 125. 8

**வாசிதீரப்பாடிக் காசு பெற்றது**

*வாசி தீரவே காசு நல்குவீர்* ... 1. 92. 1

*கறைகொள்காசினை முறைமை நல்குமே* ... 1. 92. 2

அகத்துறைப் பாடல்கள்

1. 1. 3, 1. 1. 6, 1. 56. (3, 4, 5, 6, 8, 10), 1, 60 (1-11), 1. 63 (1-12), 1. 73. (1-10), 1. 76. (1-10), 2. 18. (1-10), 2. 33. (1-10), 3. 65 (1-11), 3. 100. (1-11), 3. 104 (1-11). *அற்புதப் பதிகங்களென்று* 1. 44 (1-11), 2. 18 (1-11), 2.47. (1-11) *ஆகிய மூன்றையும் கொள்வது மரபு. இவைகளும் அகத்துறைப் பாடல்களே என்பாருமுளர்.*

அநுமான் சுக்ரீவன் சாம்புவான் வழிபட்டது

*நீரிடைத்துயின்றவன் தம்பிநீள் சாம்புவான் போருடைச் சுக்ரீவன் அநுமான் தொழ...திருவுசாத்தானமே* ... 3. 33. 1

அந்தணர் மறைமுழக்கம் சந்தியாவந்தனம்

*உள்ளங் கலந்திசையா லெழுந்த வேதமும் வேள்வியும் ஓவாவேட்களம்* ... 1. 39. 3
*வந்தியோடு பூசையல்லாப் போழ்தின் மறைபேசிச் சந்திபோதிற் சமாதி செய்யும் சண்பைநகர்* ... 1. 66. 11
*ஒன்று மிருமூன்று மொருநாலு முணர்வார்கள் மன்றினிலிருந்துடன் மகிழ்ந்த பழுவூர்* ... 2. 34. 9

அபிஷேகப் பொருள்கள்

*தேன்நெய் பால்தயிர் தெங்கிளநீர் கரும்பின்தெளி ஆன் அஞ்சாடும் முடியான்* ... 2 6. 5
*பாலினல் நறுநெய்யாற் பழத்தினாற் பயின்றாட்டி* ... 1. 61. 5
*பாலொடு நெய்தயிர் பலவுமாடுவர்* ... 3. 15. 3
*ஆடிணெய்நறு நெய்யொடு பால்தயிர்* ... 3. 1. 1

அரசர் கோயில் வழிபாடு செய்தது

*மணியொலி சங்கொலியோடு மற்றைமா முரசின் னொலி யென்று மோவாது அணிகிளர் வேந்தர் புகுதுங் கூடல் ஆலவாய்* ... 1. 7. 9
*நலமார்அரசார்வர அணிபொற்கலனவைகொண்டுபன்னளும் முரசார் வருமணமொய்ம் புடைமுதுகுன்று* 1. 12. 4
*அடியார்தொழ மன்னவரேத்த...பனையூர்* ... 1. 37. 4
*முடிசேர் தென்னர் சேரர் சோழர்கள் தாம் வணங்கும்...பூவணம்* ... 1. 64. 1
*ஆராஅன்பில் தென்னர்சேரர் சோழர்போற்றிசைப்ப* 1. 64. 5

## அருச்சுனற்குப் பாசுபதம் தந்தது

*தவமுயல் விசையன திறல்மலை மகளறி வுறதிறலமர்*
*மிடல்கொடு செய்து அசைவில படையருள் புரி*
*தருமவன்* ... 1. 20. 6
*ஏனமொன்றின் காரணமாகி வந்து வேடடைந்த*
*வேடனாகி விசயனொ டெய்ததென்னே* ... 1. 48. 6
*பஞ்சவரிற் பார்த்தனுக்குப் பாசுபதம் ஈந்துகந்தான்* 1. 62. 5

## அறம்பொருள் இன்பம் வீடு உபதேசித்தது

*சைவ வேடம் தான் நினைத்தைம்புலனும் அழிந்த*
*சிந்தை அந்தணாளர்க்கறம் பொருளின்பம் வீடு*
*மொழிந்த வாயான் முக்கண்ஆதி* ... 1. 53. 6
*முனிவருடனாயற நான்கருள்செய்த காதார் குழையர்* 1. 68. 6
*அறங்கிளரும் நால்வேதம் ஆலின்கீழிருந்தருளி* ... 1. 131. 7
*அணிபெறு வடமர நிழலினி லமர்வொடு மடியிணை*
*யிருவர்கள் பணிதர அறநெறி மறையொடு மரு*
*ளியபரன்* ... 1. 20. 5
*ஓதி ஆரணமாய நுண்பொருள் அன்று நால்வர்முன்*
*கேட்க நன்னெறி நீதியால நீழலுரைக்கின்ற*
*நீர்மை* ... 2. 50. 6
*முறைத்திறம் உறப்பொருள் தெரிந்து முனிவர்க்*
*கருளி ஆலநிழல்வாய் மறைத்திற மறத்தொகுதி*
*கண்டு சமயங்களை வகுத்தவன்* ... 3. 79. 3
*நூலடைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு*
*மாலடைந்த நால்வர்கேட்க நல்கிய நல்லறத்தை*
*ஆலடைந்த நீழல்மேவி யருமறை சொன்னதென்னே*
*சேலடைந்த தண்கழனிச்சேய்ஞலூர் மேயவனே*... 1. 48. 1

## ஆலங்காட்டு நீலி வரலாறு

*முனைநட்பாய் வஞ்சப்படுத் தொருத்தி வாணாள்*
*கொள்ளும் வகை கேட்டு அஞ்சும் பழையனூர்*
*ஆலங்காடு* ... 1. 45. 1

## ஆலையிற் புகை வருதல் (கரும்பாலையா ?)

*சோலையின் வண்டினங்கள் சுரும்போடிசை முரலச்*
*சூழ்ந்த ஆலையின் வெம்புகை போய் முகில்தோயும்*
*ஆரூர்* ... 1. 105. 2

## ஆனையை உரித்தது

*வல்லி நுண்ணிடையாள் உமையவள் தன்னை மறுகிட வரும் மதகளிற்றினை மயங்க ஒல்லையிற் பிடித்தங் குரித்தவள் வெருவல் கெடுத்தவர்* ... 1. 75. 7

## ஆனை வழிபாடு செய்தது

*விறல்மிக்க கரிக்கருள் செய்தவனே - (ஆனைக்கா)* ... 2. 23. 4

*அயிராவதம் பணிய மிக்கதனுக்கருள் சுரக்கும் வெண்காடு* ... 2. 48. 7

*நின்றுமேய்ந்து நினைந்து மாகரி நீரொடும்மலர் வேண்டி வான்மழை குன்றின் நேர்ந்து குத்திப் பணிசெய்யும் கோட்டாறு* ... 2. 52. 2

## இசைக்கு அருளும் இறைவன்

*கோழை மிடறாக கவிகோளு மிலவாக இசை கூடும் வகையால் ஏழையடியாரவர்கள் யாவை சொன சொல் மகிழும் ஈசன்* ... 3. 71. 1

*பாடல் கோழையா அழைப்பினுங் கூடுவார் நீடுவா னுலகினூடே* ... 3. 91. 11

*குறிகலந்த இசை பாடலினால் நசையால் இவ்வுல கெல்லாம் நெறிகலந்த தொருநீர்மையனாய்* ... 1. 2. 1

## இடபவாகனத்துக்கு அலங்காரம்

*இனமுடை மணியினொ டரசிலை யொளிபெற மிளிர் வதோர் சினமுதிர் விடை* ... 3. 86. 2

## இந்திரன் முதலியோர் வழிபட்டது

*சந்திரன் கதிரவன் தகுபுகழ் அயனொடும் இந்திரன் வழிபட இருந்தஎம் இறையவன் மந்திர மறை வளர் மயேந்திரப்பள்ளி* ... 3. 31. 6

*முன்னொருகாலத் திந்திரனுற்ற முனிசாபம்*
*பின்னொருநாளவ் விண்ணவரேத்தப் பெயர்வெய்தித்*
*தன்னருளாற்கண் ணாயிரமீந்தோன் சார்பென்பர்*
*கன்னியர்நாளுந் துன்னமர்கண்ணார் கோயிலே* ... 1. 101. 7

## இயற்கை வர்ணனை - இலக்கியச்சுவை

### எழுத்தோவியங்கள்

*செறியிதழ்த் தாமரைத் தவிசில் திகழ்ந்தோங்கும் இலைக்குடைக் கீழ்ச் செய்யார் செந்நெல் வெறி கதிர்ச் சாமரை யிரட்ட இளஅன்னம் வீற்றிருக் கும் மிழலையாமே* ... 1. 132. 2

*தளையவிழ்கமலத் தவிசின்மேல் அன்னந் தன்னிளம் பெடையொடும் புல்கி விளைகதிர்க் கவரிவீச வீற் றிருக்கும் மிழலை* ... 3. 119. 9

*வாவிதொறும் வண்கமலம் முகங்காட்டச் செங்குமு தம் வாய்கள் காட்டக் காவியிருங் கருங்குவளை கரு நெய்தல் கண்காட்டும் கழுமலமே* ... 1. 129. 1

*கொழுந்தரளம் நகைகாட்டக் கோகநதம் முகங் காட் டக் குதித்து நீர்மேல் விழுந்த கயல் விழிகாட்ட விற்பவளம் வாய்காட்டும் மிழலை* ... 1. 132. 3

*செய்யருகே புனல்பாய வோங்கிச் செங்கயல்பாயச் சிலமலர்த்தேன் கையருகே கனிவாழை யீன்று கானலெல்லாங் கமழ்காட்டுப் பள்ளி* ... 1. 5. 1

*தாறுடை வாழையிற் கூழைமந்தி தருகனி யுண்டு மிண்டிட்டு இனத்தைப் பாறிடப் பாய்ந்து பயிலும் ஆரூர்* ... 1. 8. 7

*மொய்சேர் வண்டுண் மும்மத நால்வாய் முரண் வேழக்கைபோல் வாழைகாய் குலையீனும் கலிக்காழி* 1. 102. 2

*எண்ணார் முத்தம் ஈன்று மரகதம்போற் காய்த்துக் கண்ணார் கமுகு பவளம் பழுக்கும் கலிக்காழி* ... 1. 102. 4

*பெருந்தண் சாரல்வாழ் சிறைவண்டு பெடைபுல்கிக் குருந்தம் ஏறிச் செவ்வழி பாடும் குற்றாலம்* ... 1. 99. 10

*வண்டுபாடமயிலாலமான்கன்று துள்ளவரிக்கெண்டை பாயச் சுனைநீல மொட்டலருங் கேதாரமே* ... 2. 114. 1

*முழையினின் மிகுதுயிலுறுமரி முசிவொடும் எழ முளரியொ டெழுகழை நுகர்தரு கரியிரி தரு கயிலை* ... 1. 22, 3

*குறமாதர் தங்கையில் மைந்தர்கள் தாவிக் கங்குலின் மாமதி பற்றும் கற்குடி* ... 1. 43. 2

*குன்றில் மலிதுன்று பொழில் நின்றகுளிர் சந்தின் முறிதின்று குலவிக் கன்றினொடு சென்றபிடி நின்று விளையாடு காளத்தி மலையே* ... 3. 69. 10

இயற்கை வர்ணனை - இலக்கியச்சுவை - எழுத்தோவியங்கள்

*பிழைத்த பிடியைக் காணாதோடிப் பெருங்கைமத வேழம் அழைத்தூத் திரிந்தங் குறங்கும் சாரல் அண்ணாமலை ... 1. 69. 4*
*அரவின் வாயின் முள்ளெயி றேய்ப்ப அரும்பீன்று குரவம்பாவை முருகமர் சோலைக் குற்றாலம் ... 1. 99. 9*
*பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றோதும் ஓசைகேட்டு வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட்சொல்லும் மிழலை ... 1. 132. 1*
*மந்தரநன் மாளிகை நிலாவுமணி நீடுகதிர் விட்டஒளி போய் வெந்தழல் விளக்கெனு விரும்பினர்திருந்து பதிவீழி நகரே ... 3. 80. 7*
*சலசல சந்தகிலோடும் உந்திச் சந்தனமே கரை சார்த்தியெங்கும் பலபலவாய்த் தலையார்த்து மண்டிப்பாய்ந்திழி காவிரி ... 1. 5. 5*

ஸ்ரீராமர் கொலைபாதகம் நீங்க வழிபட்டது

*தேவியை வவ்விய தென்னிலங் கைத்தச மாமுகன்*
*பூவிய லும்முடி பொன்றுவித் தபழி போயற*
*ஏவிய லுஞ்சிலை யண்ணல்செய் தவிரா மேச்சுரம்*
*மேவிய சிந்தையி னார்கள்தம் மேல்வினை வீடுமே ... 3. 10. 2*

இராவணனோடு சடாயு சம்பாதிபோர் செய்தது

*ஆகாயத் தேரோடும் இராவணனை அமரின்கண் போகாமே பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே ... 2. 43. 4*

இராவணன் - அயனரி - அமண்பாக்கள் - எண்மாறிய பதிகங்கள்

*முதல் திருமுறை* 5, 39, 45, 57, 63, 78, 87, 90
*இரண்டாந்திருமுறை* 2, 6, 20, 58, 67, 70. 73, 74, 78, 79, 112, 117
*மூன்றாந் திருமுறை* 37, 58, 72, 76, 110, 113
[*சம்பந்தர் தேவாரத்தில் இராவணன், அயனரி, அமண் குறிப்புக்கள் முறையே* 8, 9, 10 - *வது பாடல்களில் வரும்*]

இராவணன் கயிலையைப் பெயர்க்க முயன்றது

*இத்தேர் ஏக இம்மலை பேர்ப்பன் என்றேந்தும் பத்தோர் வாயான் வரைக் கீழலறப் பாதந்தான் வைத்தார்* ... 2. 63. 8

இராவணன் குறிப்பில்லாத பதிகங்கள்

*முதல் திருமுறை* 5, 63, 73, 83, 87, 118, 119, 121
*இரண்டாம்* ,, 43, 67, 68, 77, 78, 79, 100, 111, 112
*மூன்றாம்* ,, 1, 53, 63, 94, 102, 104, 112

இராவணன் கோகர்ணத்தில் வழிபட்டது

*பத்துடைய மன்னன் அவனைக் கூசவகை கண்டுபின் அவற்கருள்கள் நல்கவல கோகரணமே* ... 3. 79. 10

இராவணன் வாலியாற் கட்டுண்டது

*நீலமாமணி நிறத்தரக்கனை இருபதுகரத்தொ டொல்க வாலினாற் கட்டிய வாலியார்* ... 3. 91. 8

இருக்கு வேதம் கூறுங் கடவுள் சிவனே

*இருக்கின் மலிந்த இறைவர் அவர் போலாம் அருப்பின் முலையாள் பங்கத் தையரே* ... 1. 24. 10

இன்பத்துள் இன்பம்

*சிற்றம்பலமேய இறைவன் கழலேத்தும் இன்பம் இன்பமே.* ... 1. 80. 4

உபதேசங்கள்

*சித்தந் தெளிவீர்காள், அத்தன் ஆரூரைப்*
*பத்தி மலர்தூவ, முத்தி யாகுமே.* 1. 91. 1, 1. 91. (2—11)
*சித்தமதொன்றிச் செங்கழ லுன்னிச் சிவனென்று*
*நித்தலு மேத்தத் தொல்வினை நம்மேல் நில்லாவே* 1. 100. 8
*கைவினை செய்தெம் பிரான் கழல் போற்றுதும்* ... 1. 116. 1
*காவினை யிட்டும் குளம்பல தொட்டும் கனிமனத்தால்*
*பூவினைக் கொய்து மலரடி போற்றுதும்* ... 1. 116. 2
*நீநாளும் நன்னெஞ்சே நினைகண்டாய் யாரறிவார்*
*சாநாளும் வாழ்நாளுஞ் சாய்க்காட்டெம் பெருமாற்கே*
*பூநாளுந் தலைசுமப்பப் புகழ்நாமஞ் செவிகேட்ப*
*நாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே* 2. 41. 3

உபமன்னியு முனிக்குப் பாற்கடலீந்தது

*படிமலர்ப் பாலனுக்காகப் பாற்கட லீந்திலர்போலும்* 2. 65. 9

ஆடல்சா லவ்வுடை யாரழ காகிய
பீடர்கோ யில்லரா தைப்பெரும் பாழியே. ௩

மண்ணார்நீ ராரழ லார்மலி காலினார்
விண்ணார்வே தம்விரித் தோதுவார் மெய்ப்பொருள்
பண்ணார்பா டலுடை யாரொரு பாகமும்
பெண்ணார்கோ யில்லரா தைப்பெரும் பாழியே. ௪

மறையர்வா யின்மொழி மானொடு வெண்மழுக்
கறைகொள்சூ லம்முடைக் கையர்கா ரார்தரும்
நறைகொள்கொன் றைநயந் தார்தருஞ் சென்னிமேல்
பிறையர்கோ யில்லரா தைப்பெரும் பாழியே. ௫

புற்றரா வம்புலித் தோலரைக் கோவணம்
தற்றிர வின்னட மாடுவர் தாழ்தரு
சுற்றமர் பாரிடந் தொல்கொடி யின்மிசைப்
பெற்றர்கோ யில்லரா தைப்பெரும் பாழியே. ௬

துணையிறுத் தஞ்சுரி சங்கமர் வெண்பொடி
இணையிலேற் றையுகந் தேறுவ ரும்மெரி
கணையினால் முப்புரஞ் செற்றவர் கையினில்
பிணையர்கோ யில்லரா தைப்பெரும் பாழியே. ௭

சரிவிலா வல்லரக் கன்தடந் தோள்தலை
நெரிவிலா ரவ்வடர்த் தார்நெறி மென்குழல்
அரிவைபா கம்மமர்ந் தாரடி யாரொடும்
பிரிவில்கோ யில்லரா தைப்பெரும் பாழியே. ௮

வரியரா என்பணி மார்பினர் நீர்மல்கும்
எரியரா வுஞ்சடை மேற்பிறை யேற்றவர்
கரியமா லோடயன் காண்பரி தாகிய
பெரியர்கோ யில்லரா தைப்பெரும் பாழியே. ௯

நாணிலா தசமண் சாக்கியர் நாள்தொறும்
ஏணிலா தம்மொழி யவ்வெழி லாயவர்
சேணுலா மும்மதில் தீயெழச் செற்றவர்
பேணுகோ யில்லரா தைப்பெரும் பாழியே. ௧0

நீரினார் புன்சடை நிமலனுக் கிடமெனப்
பாரினார் பரவரு தைப்பெரும் பாழியைச்
சீரினார் காழியுள் ஞானசம் பந்தன்செய்
ஏரினார் தமிழ்வல்லார்க் கில்லையாம் பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## 31. திருமயேந்திரப்பள்ளி : பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

திரைதரு பவளமுஞ் சீர்திகழ் வயிரமுங்
கரைதரு மகிலொடு கனவளை புகுதரும்
வரைவிலா லெயிலெய்த மயேந்திரப் பள்ளியுள்
அரவரை யழகனை யடியிணை பணிமினே. ௧

கொண்டல்சேர் கோபுரங் கோலமார் மாளிகை
கண்டலுங் கைதையுங் கமலமார் வாவியும்
வண்டுலாம் பொழிலணி மயேந்திரப் பள்ளியிற்
செண்டுசேர் விடையினான் திருந்தடி பணிமினே. ௨

கோங்கிள வேங்கையுங் கொழுமலர்ப் புன்னையுந்
தாங்குதேன் கொன்றையுந் தகுமலர்க் குரவமு
மாங்கரும் பும்வயன் மயேந்திரப் பள்ளியுள்
ஆங்கிருந் தவன்கழ லடியிணை பணிமினே. ௩

வங்கமார் சேணுயர் வருகுறி யான்மிகு
சங்கமா ரொலியகில் தருபுகை கமழ்தரு
மங்கையோர் பங்கினன் மயேந்திரப் பள்ளியுள்
எங்கள்நா யகன்றன திணையடி பணிமினே. ௪

நித்திலத் தொகைபல நிரைதரு மலரெனச்
சித்திரப் புணரிசேர்த் திடத்திகழ்ந் திருந்தவன்
மைத்திகழ் கண்டனன் மயேந்திரப் பள்ளியுட்
கைத்தல மழுவனைக் கண்டடி பணிமினே. ௫

சந்திரன் கதிரவன் தகுபுக ழயனொடும்
இந்திரன் வழிபட இருந்தஎம் மிறையவன்

மந்திர மறைவளர் மயேந்திரப் பள்ளியுள
அந்தமி லழகனை யடிபணிந் துய்ம்மினே. ௬

சடைமுடி முனிவர்கள் சமைவொடும் வழிபட
நடநவில் புரிவினன் நறவணி மலரொடு
படர்சடை மதியினன் மயேந்திரப் பள்ளியுள்
அடல்விடை யுடையவ னடிபணிந் துய்ம்மினே. ௭

சிரமொரு பதுமுடைச் செருவலி யரக்கனைக்
கரமிரு பதுமிறக் கனவரை யடர்த்தவன்
மரவமர் பூம்பொழில் மயேந்திரப் பள்ளியுள்
அரவமர் சடையனை யடிபணிந் துய்ம்மினே. ௮

நாகணைத் துயில்பவன் நலமிகு மலரவன்
ஆகணைந் தவர்கழ லணையவும் பெறுகிலர்
மாகணைந் தவர்பொழில் மயேந்திரப் பள்ளியுள்
யோகணைந் தவன்கழ லுணர்ந்திருந் துய்ம்மினே. ௯

உடைதுறந் தவர்களு முடைதுவ ருடையரும்
படுபழி யுடையவர் பகர்வன விடுமினீர்
மடைவளர் வயலணி மயேந்திரப் பள்ளியுள்
இடமுடை யீசனை யிணையடி பணிமினே. ௧0

வம்புலாம் பொழிலணி மயேந்திரப் பள்ளியுள்
நம்பனார் கழலடி ஞானசம் பந்தன்சொல்
நம்பர மிதுவென நாவினால் நவில்பவர்
உம்பரா ரெதிர்கொள வுயர்பதி யணைவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## 32. திருஏடகம் : பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

வன்னியு மத்தமு மதிபொதி சடையினன்
பொன்னியல் திருவடி புதுமல ரவைகொடு
மன்னிய மறையவர் வழிபட அடியவர்
இன்னிசை பாடலா ரேடகத் தொருவனே. ௧

கொடிநெடு மாளிகை கோபுரங் குளிர்மதி
வடிவுற அமைதர மருவிய வேடகத்
தடிகளை யடிபணிந் தரற்றுமி னன்பினால்
இடிபடும் வினைகள்போ யில்லைய தாகுமே. ௨

குண்டலந் திகழ்தரு காதுடைக் குழகனை
வண்டலம் பும்மலர்க் கொன்றைவான் மதியணி
செண்டலம் பும்விடைச் சேடனூ ரேடகம்
கண்டுகை தொழுதலுங் கவலைநோய் கழலுமே. ௩

ஏலமார் தருகுழ லேழையோ டெழில்பெறும்
கோலமார் தருவிடைக் குழகனா ருறைவிடம்
சாலமா தவிகளுஞ் சந்தனஞ் சண்பகம்
சீலமா ரேடகஞ் சேர்தலாஞ் செல்வமே. ௪

வரியணி நயனிநன் மலைமகள் மறுகிடக்
கரியினை யுரிசெய்த கறையணி மிடறினன்
பெரியவன் பெண்ணினோ டாணலி யாகிய
எரியவ னுறைவிட மேடகக் கோயிலே. ௫

பொய்கையின் பொழிலுறு புதுமலர்த் தென்றலார்
வைகையின் வடகரை மருவிய வேடகத்
தையனை யடிபணிந் தரற்றுமி னடர்தரும்
வெய்யவன் பிணிகெட வீடெளி தாகுமே. ௬, ௭

தடவரை யெடுத்தவன் தருக்கிறத் தோளடர்
படவிர லூன்றியே பரிந்தவற் கருள்செய்தான்
மடவர லெருக்கொடு வன்னியு மத்தமும்
இடமுடைச் சடையின னேடகத் திறைவனே. ௮

பொன்னுமா மணிகளும் பொருதிரைச் சந்தகில்
தன்னுளார் வைகையின் கரைதனிற் சமைவுற
அன்னமா மயனுமா லடிமுடி தேடியும்
இன்னவா றெனவொணா னேடகத் தொருவனே. ௯

குண்டிகைக் கையினர் குணமிலாத் தேரர்கள்
பண்டியைப் பெருக்கிடும் பளகர்கள் பணிகிலர்

வண்டிரைக் கும்மலர்க் கொன்றையும் வன்னியும்
இண்டைசேர்க் குஞ்சடை யெடகத் தெந்தையே. ௧0

கோடுசந் தனமகில் கொண்டிழி வைகைநீர்
ஏடுசேன் றணைதரு மேடகத் தொருவனை
நாடுதென் புகலியுள் ஞானசம் பந்தன
பாடல்பத் திவைவல்லார்க் கில்லையாம் பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## 33. திருவுசாத்தானம் : பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

நீரிடைத் துயின்றவன் தம்பிநீள் சாம்புவான்
போருடைச் சுக்கிரீ வன்அநு மான்தொழக்
காருடை நஞ்சுண்டு காத்தருள் செய்தஎம்
சீருடைச் சேடர்வாழ் திருவுசாத் தானமே. ௧

கொல்லையே றுடையவன் கோவண ஆடையன்
பல்லையார் படுதலைப் பலிகொளும் பரமனார்
முல்லையார் புறவணி முதுமதி நறைகமழ்
தில்லையா னுறைவிடந் திருவுசாத் தானமே. ௨

தாமலார் போலவே தக்கனார் வேள்வியை
ஊமனார் தங்கனா வாக்கினா னொருநொடிக்
காமனா ருடல்கெடக் காய்ந்தஎங் கண்ணுதல்
சேமமா வுறைவிடந் திருவுசாத் தானமே. ௩

மறிதரு கரத்தினன் மால்விடை யேறியான்
குறிதரு கோலநற் குணத்தினா ரடிதொழ
நெறிதரு வேதியர் நித்தலு நியமஞ்செய்
செறிதரு பொழிலணி திருவுசாத் தானமே. ௪, ௫, ௬

பண்டிரைத் தயனுமா லும்பல பத்தர்கள்
தொண்டிரைத் தும்மலர் தூவித்தோத் திரஞ்சொலக்
கொண்டிரைக் கொடியொடுங் குருகினி னல்லினம்
தெண்டிரைக் கழனிசூழ் திருவுசாத் தானமே.

மடவரல் பங்கினன் மலைதனை மதியாது
சடசட எடுத்தவன் தலைபத்தும் நெரிதர
அடர்தர வூன்றியங் கேயவற் கருள்செய்தான்
திடமென வுறைவிடந் திருவுசாத் தானமே. அ

ஆணலார் பெண்ணலா ரயனொடு மாலுக்குங்
காணொணா வண்ணத்தான் கருதுவார் மனத்துளான்
பேணுவார் பிணியொடும் பிறப்பறுப் பானிடஞ்
சேணுலா மாளிகைத் திருவுசாத் தானமே. கூ

கானமார் வாழ்க்கையான் காரமண் தேரர்சொல்
ஊனமாக் கொண்டுநீ ருரைமினுய் யவெனில்
வானமார் மதிலணி மாளிகை வளர்பொழில்
தேனமா மதியந்தோய் திருவுசாத் தானமே. க0

வரைதிரிந் திழியுநீர் வளவயற் புகலிமன்
திரைதிரிந் தெறிகடற் றிருவுசாத் தானரை
உரைதெரிந் துணருஞ்சம் பந்தனொண் தமிழ்வல்லார்
நரைதிரை யின்றியே நன்னெறி சேர்வரே. கக

திருச்சிற்றம்பலம்

---

## 34. திருமுதுகுன்றம் : பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

வண்ணமா மலர்கொடு வானவர் வழிபட
அண்ணலா ராயிழை யாளொடு மமர்விடம்
விண்ணின்மா மழைபொழிந் திழியவெள் ளருவிசேர்
திண்ணிலார் புறவணி திருமுது குன்றமே. க

வெறியுலாங் கொன்றையந் தாரினன் மேதகு
பொறியுலா மரவசைத் தாடியோர் புண்ணியன்
மறியுலாங் கையினன் மங்கையோ டமர்விடஞ்
செறியுளார் புறவணி திருமுது குன்றமே. உ

ஏறினர் விடைமிசை யிமையவர் தொழவுமை
கூறனர் கொல்புலித் தோலினர் மேனிமேல்

நீறனார் நிறைபுனற் சடையனார் நிகழ்விடம்
தேறலார் பொழிலணி திருமுது குன்றமே. ங

உரையினா றுறுபொரு ளாயினா னுமையொடும்
விரையினார் கொன்றைசேர் சடையினார் மேவிடம்
உரையினா லொலியென வோங்குமுத் தாறுமெய்த்
திரையினா லெறிபுனற் றிருமுது குன்றமே. ச

கடியவா யினகுரற் களிற்றினைப் பிளிறவோர்
இடியவெங் குரலினோ டாளிசென் றிடுநெறி
வடியவாய் மழுவினன் மங்கையோ டமர்விடம்
செடியதார் புறவணி திருமுது குன்றமே. ரு

கானமார் கரியினீ றுரிவையார் பெரியதோர்
வானமார் மதியினோ டரவர்தா மருவிடம்
ஊனமா யினபிணி யவைகெடுத் துமையொடும்
தேனமார் பொழிலணி திருமுது குன்றமே. சு

மஞ்சர்தா மலர்கொடு வானவர் வணங்கிட
வெஞ்சொலார் வேடரோ டாடவர் விரும்பவே
அஞ்சொலா ளுமையொடும் மமர்விட மணிகலைச்
செஞ்சொலார் பயில்தருந் திருமுது குன்றமே. எ

காரினா ரமர்தருங் கயிலைநன் மலையினை
ஏரினார் முடியிரா வணனெடுத் தானிற
வாரினார் முலையொடும் மன்னினார் மருவிடம்
சீரினார் திகழ்தருந் திருமுது குன்றமே. அ

ஆடினார் கானகத் தருமறை யின்பொருள்
பாடினார் பலபுகழ்ப் பரமனா ரிணையடி
ஏடினார் மலர்மிசை யயனுமா லிருவரும்
தேடினா ரறிவொணார் திருமுது குன்றமே. கூ

மாசுமெய் தூசுகொண் டுழல்சமண் சாக்கியர்
பேசுமெய் யுளவல்ல பேணுவீர் காணுமின்
வாசமார் தருபொழில் வண்டினம் மிசைசெயத்
தேசமார் புகழ்மிகுந் திருமுது குன்றமே க௦

திண்ணினார் புறவணி திருமுது குன்றரை
நண்ணினான் காழியுள் ஞானசம் பந்தன்சொல்
எண்ணினா னீரைந்து மாலையு மியலுமாப்
பண்ணினாற் பாடுவார்க் கில்லையாம் பாவமே. கக

திருச்சிற்றம்பலம்

---

## 35. திருத்தேன்குடித்திட்டை : பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

முன்னைநான் மறையவை முறைமுறை குறைகொடுந்
தன்னதாள் தொழுதெழ நின்றவன் தன்னிடம்
மன்னுமா காவிரி வந்தடி வருடநல்
செங்நெலார் வளவயல் தென்குடித் திட்டையே. க

மகரமா டுங்கொடி மன்மத வேள்தனை
நிகரலா காநெருப் பெழவிழித் தானிடம்
பகரபா ணித்திலம் பன்மக ரத்தொடும்
சிகரமா ளிகைதொகுந் தென்குடித் திட்டையே. உ

கருவினா லன்றியே கருவெலா மாயவன்
உருவினா லன்றியே யுருவுசெய் தானிடம்
பருவநாள் விழவொடும் பாடலோ டாடலும்
திருவினால் மிகுபுகழ்த் தென்குடித் திட்டையே. ங

உண்ணிலா வாவியா யோங்குதன் தன்மையை
விண்ணிலா ரறிகிலா வேதவே தாந்தனூர்
எண்ணிலா ரெழில்மணிக் கனகமா ளிகையிளந்
தெண்ணிலா விரிதருந் தென்குடித் திட்டையே. ச

வருந்திவா னோர்கள்வந் தடையமா நஞ்சுதான்
அருந்தியா ரமுதவர்க் கருள்செய்தா னமருமூர்
செருந்திபூ மாதவிப் பந்தர்வண் செண்பகம்
திருந்துநீள் வளர்பொழில் தென்குடித் திட்டையே. ரு

ஊறினா ரோசையுள் ளொன்றினா ரொன்றிமால்
கூறினா ரமர்தருங் குமரவேள் தாதையூர்

ஆறினார் பொய்யகத் தையுணர் வெய்திமெய்
தேறினார் வழிபடுந் தென்குடித் திட்டையே. ௬

கானலைக் கும்மவன் கண்ணிடந் தப்பநீள்
வானலைக் குந்தவத் தேவுவைத் தானிடம்
தானலைத் தெள்ளமூர் தாமரைத் தண்டுறை
தேனலைக் கும்வயல் தென்குடித் திட்டையே. ௭

மாலொடும் பொருதிறல் வாளரக் கன்னெரிந்
தோவிடும் படிவிர லொன்றுவைத் தானிடம்
காலொடுங் கனகமூக் குடன்வரக் கயல்வரால்
சேலொடும் பாய்வயல் தென்குடித் திட்டையே. ௮

நாரணன் தன்னொடு நான்முகன் தானுமாய்க்
காரணன் னடிமுடி காணவொண் ணானிடம்
ஆரணங் கொண்டுபூ சுரர்கள்வந் தடிதொழச்
சீரணங் கும்புகழ்த் தென்குடித் திட்டையே. ௯

குண்டிகைக் கையுடைக் குண்டரும் புத்தரும்
பண்டுரைத் தேயிடும் பற்றுவிட் டீர்தொழும்
வண்டிரைக் கும்பொழில் தண்டலைக் கொண்டலார்
தெண்டிரைத் தண்புனல் தென்குடித் திட்டையே. ௧௦

தேனலார் சோலைசூழ் தென்குடித் திட்டையைக்
கானலார் கடிபொழில் சூழ்தருங் காழியுள்
ஞானமார் ஞானசம் பந்தன செந்தமிழ்
பானலார் மொழிவலார்க் கில்லையாம் பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## 36. திருக்காளத்தி : பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

சந்தமா ரகிலொடு சாதிதேக் கம்மரம்
உந்துமா முகலியின் கரையினி லுமையொடும்
மந்தமார் பொழில்வளர் மல்குவண் காளத்தி
எந்தையா ரிணையடி யென்மனத் துள்ளவே. ௧

ஆலமா மரவமோ டமைந்தசீர்ச் சந்தனஞ்
சாலமா பீலியுஞ் சண்பக முந்தியே
காலமார் முகலிவந் தணைதரு காளத்தி
நீலமார் கண்டனை நினையுமா நினைவதே. ௨

கோங்கமே குரவமே கொன்றையம் பாதிரி
மூங்கில்வந் தணைதரு முகலியின் கரையினில்
ஆங்கமர் காளத்தி யடிகளை யடிதொழ
வீங்குவெந் துயர்கெடும் வீடெளி தாகுமே. ௩

கரும்புதேன் கட்டியுங் கதலியின் கனிகளும்
அரும்புநீர் முகலியின் கரையினி லணிமதி
ஒருங்குவார் சடையினன் காளத்தி யொருவனை
விரும்புவா ரவர்கள்தாம் விண்ணுல காள்வரே. ௪

வரைதரு மகிலொடு மாமுத்த முந்தியே
திரைதரு முகலியின் கரையினில் தேமலர்
விரைதரு சடைமுடிக் காளத்தி விண்ணவன்
நிரைதரு கழலிணை நித்தலு நினைமினே. ரு, சு, எ

முத்துமா மணிகளு முழுமலர்த் திரள்களும்
எத்துமா முகலியின் கரையினி லெழில்பெறக்
கத்திட அரக்கனைக் கால்விர லூன்றிய
அத்தன்றன் காளத்தி யணைவது கருமமே. அ

மண்ணுமா வேங்கையும் மருதுகள் பீழ்ந்துந்தி
நண்ணுமா முகலியின் கரையினில் நன்மைசேர்
வண்ணமா மலரவன் மாலவன் காண்கிலா
அண்ணலார் காளத்தி யாங்கணைந் துய்ம்மினே. கூ

வீங்கிய வுடலினர் விரிதரு துவருடைப்
பாங்கிலார் சொலைவிடும் பரனடி பணியுமின்
ஓங்குவண் காளத்தி யுள்ளமோ டுணர்தர
வாங்கிடும் வினைகளை வானவர்க் கொருவனே. க0

அட்டமா சித்திக ளணைதரு காளத்தி
வட்டவார் சடையனை வயலணி காழியான்
சிட்டநான் மறைவல ஞானசம் பந்தன்சொல்
இட்டமாப் பாடுவார்க் கில்லையாம் பாவமே. கக

திருச்சிற்றம்பலம்

---

## 37. திருப்பிரமபுரம் : பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

கரமுனம்மல ராற்புனல்மலர் தூவியேகலந் தேத்துமின்
பரமனூர்பல பேரினாற்பொலி பத்தர்சித்தர்கள் தாம்பயில்
வரமுன்னவ்வருள் செய்யவல்லஎம்மை யன்னாள்தொறும் மேயசீர்ப்
பிரமனூர்பிர மாபுரத்துறை பிஞ்ஞகனருள் பேணியே. க

விண்ணிலார்மதி சூடினான்விரும் பும்மறையவன் தன்தலை
உண்ணநன்பலி பேணினானுல கத்துளூனுயி ரான்மலைப்
பெண்ணினார்திரு மேனியான்பிர மாபுரத்துறை கோயிலுள்
அண்ணலாரரு ளாளனாயமர் கின்றஎம்முடை யாதியே. உ

எல்லையில்புக ழாளனும்மிமை யோர்கணத்துடன் கூடியும்
பல்லையார்தலை யிற்பலியது கொண்டுகந்த படிறனுந் [தவே
தொல்லைவையகத் தேறுதொண்டர்கள் தூமலர்சொரிந் தேத்
மல்லையம்பொழில் தேன்பில்கும்பிர மாபுரத்துறை மைந்தனே.

அடையலார்புரஞ் சீறியந்தண ரேத்தமாமட மாதொடும்,
பெடையெலாங்கடற் கானல்புல்கும்பிர மாபுரத்துறை கோயி
லான், தொடையலார்நறுங் கொன்றையான்தொழி லேபரவி
நின் றேத்தினால், இடையிலார்சிவ லோகமெய்துதற் கீது
காரணங் காண்மினே. ச

வாயிடைம்மறை யோதிமங்கையர் வந்திடப்பலி கொண்டு
போயிடம்மெரி கானிடைப்புரி நாடகம்மினி தாடினான் [போய்ப்.
பேயொடுங்குடி வாழ்வினான்பிர மாபுரத்துறை பிஞ்ஞகன்
தாயிடைப்பொருள் தந்தையாகுமென் றோதுவார்க்கருள் தன்மையே.

ஊடினலினி யாவதென்னுயர் நெஞ்சமேயுறு வல்வினைக்
கோடிநீயுழல் கின்றதென்னழ லன்றுதன்கையி லேந்தினன்
பீடுநேர்ந்தது கொள்கையான்பிர மாபுரத்துறை வேதியன்
ஏடுநேர்மதி யோடராவணி யெந்தையென்றுநின் றேத்திடே.

செய்யன்வெள்ளிய னொள்ளியார்சில ரென்றுமேத்தி நினைந்திட
ஐயனாண்டகை யந்தணனரு மாமறைப்பொரு ளாயினான்
பெய்யுமாமழை யானவன்பிர மாபுரமிடம் பேணிய [வே.
வெய்யவெண்மழு வேந்தியைந்நினைந் தேத்துமின்வினை வீட

கன்றொருக்கையி லேந்திநல்விள வின்கனிபட நூறியுஞ்[மாய்
சென்றொருக்கிய மாமறைப்பொருள் தேர்ந்தசெம்மல ரோனு
அன்றரக்கனைச் செற்றவனடி யும்முடியவை காண்கிலார்
பின்தருக்கிய தண்பொழிற்பிர மாபுரத்தரன் பெற்றியே. அ

உண்டுடுக்கைவிட் டார்களும்முயர் கஞ்சிமண்டைகொள் தேரரும், பண்டடக்குசொற் பேசும்பரி வொன்றிலார்கள் சொற் கொள்ளன்மின், தண்டொடக்குவன் சூலமுந்தழல் மாமழுப்படை தன்கையிற், கொண்டொடுக்கிய மைந்த னெம்பிர மாபுரத்துறை கூத்தனே. கூ

பித்தனைப்பிர மாபுரத்துறை பிஞ்ஞகன்கழல் பேணியே, மெய்த்தவத்துநின் றோர்களுக்குரை செய்துநன்பொருள் மேவிட, வைத்தசிந்தையுள் ஞானசம்பந்தன் வாய்நவின் றெழு மாலைகள், பொய்த்தவம்பொறி நீங்கஇன்னிசை போற்றிசெய்யும்மெய்ம் மாந்தரே. கO

திருச்சிற்றம்பலம்

## 38. திருக்கண்டியூர்வீரட்டம் : பண் - கொல்லி

### வி னு வு ரை

திருச்சிற்றம்பலம்

வினவினேனறி யாமையிலுரை செய்ம்மினீரருள் வேண்டுவீர், கனைவிலார் புனற் காவிரிக்கரை மேயகண்டியூர் வீரட்டன், தனமுனேதனக் கின்மையோதம ராயினாரண்ட

மாளத்தான், வனனில் வாழ்க்கைகொண் டாடிப்பாடியிவ்
வையமாப்பலி தேர்ந்ததே. க

உள்ளவாறெனக் குரைசெய்மின்னுயர் வாயமாதவம்
பேணுவீர், கள்ளவிழ்பொழில் சூழுங்கண்டியூர் வீரட்டத்
துறை காதலான், பிள்ளைவான்பிறை செஞ்சடைம்மிசை
வைத்ததும்பெரு நீரொலி, வெள்ளந்தாங்கிய தென்கொலோ
மிகுமங்கையாளுட னாகவே. உ

அடியாராயினீர் சொல்லுமின்னறி கின்றிலேனரன் செய்
கையைப், படியெலாந்தொழு தேத்துகண்டியூர் வீரட்
டத்துறை பான்மையான், முடிவுமாய்முத லாயிவ்வைய
முழுதுமாயழ காயதோர், பொடியதார்திரு மார்பினிற்புரி
நூலும்பூண்டெழு பொற்பதே. ங

பழையதொண்டர்கள் பகருமின்பல வாயவேதியன்
பான்மையைக், கழையுலாம்புனல் மல்குகாவிரி மன்னுகண்டி
யூர் வீரட்டன், குழையொர்காதினிற் பெய்துகந்தொரு குன்
றின்மங்கை வெருவுறப், புழைநெடுங்கைநன் மாவுரித்தது
போர்த்துகந்த பொலிவதே. ச

விரவிலாதுமைக் கேட்கின்றேனடி விரும்பியாட்செய்
வீர் விளம்புமின், கரையெலாந்திரை மண்டுகாவிரிக் கண்டி
யூருறை வீரட்டன், முரவமொந்தை முழாவொலிக்க முழங்கு
பேயொடுங் கூடிப்போய்ப், பரவுவானவர்க் காகவார்கடல்
நஞ்சமுண்ட பரிசதே. ரு

இயலுமாறெனக் கியம்புமின்னிறை வனுமாய்நிறை
செய்கையைக், கயல்நெடுங்கண்ணி னார்கள்தாம்பொலி கண்டி
யூருறை வீரட்டன், புயல்பொழிந்திழி வானுளோர்களுக்
காகவன்றயன் பொய்ச்சிரம், அயனகவ்வ தரிந்துமற்றதி
லூணுகந்த வருத்தியே. சு

திருந்துதொண்டர்கள் செப்புமின்மிகச் செல்வன்றன்
னது திறமெலாம், கருந்தடங்கண்ணி னார்கள் தாந்தொழு
கண்டியூருறை வீரட்டன், இருந்துநால்வரொ டால்நிழ

லற முரைத்ததும்மிகு வெம்மையார், வருந்தவன்சிலை யாலம்
மாமதில் மூன்றுமாட்டிய வண்ணமே. ௭

நாவிரித்தரன் தொல்புகழ்பல பேணுவீரிறை நல்கு
மின், காவிரித்தடம் புனல்செய்கண்டியூர் வீரட்டத்துறை
கண்ணுதல், கோவிரிப்பயன் ஆனஞ்சாடிய கொள்கையுங்
கொடி வரைபெற, மாவரைத்தலத் தாலரக்கனை வலியைவாட்
டிய மாண்பதே. ௮

பெருமையேசர ணாகவாழ்வுறு மாந்தர்காளிறை பேசுமின்
கருமையார்பொழில்சூழுந் தண்வயற் கண்டியூருறைவீரட்டன்
ஒருமையாலுயர் மாலுமற்றை மலரவன்னுணர்ந் தேத்தவே
அருமையாலவ ருக்குயர்ந்தெரி யாகிநின்றஅத் தன்மையே.

நமரெழுபிறப் பறுக்குமாந்தர்காள் நவிலுமின்னுமைக்
கேட்கின்றேன், கமரழிவயல் சூழுந்தண்புனற் கண்டியூருறை
வீரட்டன், தமரழிந்தெழு சாக்கியச்சம ணாதரோது மது
கொளா,தமரரானவ ரேத்தஅந்தகன் தன்னைச்சூலத்தி லாய்ந்
ததே. ௧0

கருத்தனைப்பொழில்சூழுங்கண்டியூர்வீரட்டத்துறைகள்வனை
அருத்தனைத்திற மடியர்பால்மிகக் கேட்டுகந்த வினாவுளா
திருத்தமாந்திகழ் காழிஞானசம் பந்தன்செப்பிய செந்தமிழ்
ஒருத்தராகிலும்பலர்களாகிலுமுரைசெய்வாருயர்ந்தார்களே.

திருச்சிற்றம்பலம்

## 39. திருஆலவாய் : பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

மானினேர்விழி மாதராய்வழு திக்குமாபெருந் தேவிகேள்
பானல்வாயொரு பாலனீங்கிவ னென்றுநீபரி வெய்திடேல்
ஆனை மாமலை யாதியாய இடங்களிற்பல அல்லல்சேர்
ஈனர்கட்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. ௧

ஆகமத்தொடு மந்திரங்க ளமைந்தசங்கத பங்கமாப்
பாகதத்தொ டிரைத்துரைத்த சனங்கள்வெட்குறு பக்கமா

மாகதக்கரி போற்றிரிந்து புரிந்துநின் றுணு மாசுசேர்
ஆகதர்க்கெளி யேனலேன் திரு ஆலவாயரன் நிற்கவே. உ

அத்தகுபொரு ளுண்டுமில்லையு மென்றுநின்றவர்க் கச்சமா
ஒத்தொவ்வாமை மொழிந்துவாதி லழிந்தெழுந்த கவிப்பெயர்
சத்திரத்தின் மடிந்தொடிந்து சனங்கள்வெட்குற நக்கமே [ச்
சித்திரர்க்கெளி யேனலேன் திரு ஆலவாயரன் நிற்கவே. ௩

சந்துசேனனு மிந்துசேனனுந் தருமசேனனுங் கருமைசேர்
கந்துசேனனுங் கனகசேனனு முதலதாகிய பெயர்கொளா
மந்திபோற்றிரிந் தாரியத்தொடு செந்தமிழ்ப்பய னறிகிலா
அந்தகர்க்கெளி யேனலேன் திரு ஆலவாயரன் நிற்கவே. ச

கூட்டினார்கிளியின்விருத்தமுரைத்ததோரொலியின்றொழிற்
பாட்டுமெய்சொலிப் பக்கமேசெலு மெக்கர்தங்களைப் பல்லறம்
காட்டியேவரு மாடெலாங்கவர் கையரைக்கசி வொன்றிலாச்
சேட்டைகட்கெளி யேனலேன் திரு ஆலவாயரன் நிற்கவே.

கனகநந்தியும் புட்பநந்தியும் பவணநந்தியுங் குமணமா
சுனகநந்தியுங் குனகநந்தியுந் திவணநந்தியு மொழிகொளா
அனகநந்தியர் மதுவொழிந்தவ மேதவம்புரி வோமெனும்
சினகருக்கெளி யேனலேன் திரு ஆலவாயரன் நிற்கவே. சுூ

பந்தணம்மவை யொன்றிலம்பரி வொன்றிலம்மென வாசக
மந்தணம்பல பேசிமாசறு சீர்மையின்றிய நாயமே
அந்தணம்மரு கந்தணம்மது புத்தணம்மது சித்தணச்
சிந்தணர்க்கெளி யேனலேன் திரு ஆலவாயரன் நிற்கவே. எ

மேலெனக்கெதி ரில்லையென்ற அரக்கனார்மிகை செற்றதீப்
போலியைப்பணி யாக்கிலாதொரு பொய்த்தவங்கொடு குண்டிகை
பீலிகைக்கொடு பாயிடுக்கி நடுக்கியேபிறர் பின்செலும் [கை
சீலிகட்கெளி யேனலேன் திரு ஆலவாயரன் நிற்கவே. அ

பூமகற்கும ரிக்குமோர்வரு புண்ணியன்னடி போற்றிலார் [வம்
சாமவத்தையி னார்கள்போல்தலை யைப்பறித்தொருபொய்த்த
வேமவத்தைசெ லுத்திமெய்ப்பொடி யட்டிவாய்சக திக்குநோர்
ஆமவர்க்கெளி யேனலேன் திரு ஆலவாயரன் நிற்கவே. கூ

தங்களுக்குமச் சாக்கியர்க்குந் தரிப்பொணாதநற் சேவடி [ம்
எங்கள்நாயக னேத்தொழிந்திடுக் கேமடுத்தொரு பொய்த்தவ
பொங்குநூல்வழி யன்றியேபுல வோர்களைப்பழிக்கும்பொலா
அங்கதர்க்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. க0

எக்கராமமண் கையருக்கெளி யேனலேன்திரு ஆலவாய்ச்
சொக்கனென்னு ளிருக்கவேதுளங்கும்முடித்தென்னன் முன்னிவை
தக்கசீர்ப்புக லிக்குமன்தமிழ் நாதன்ஞானசம் பந்தன்வாய்
ஒக்கவேயுரை செய்தபத்து முரைப்பவர்க்கிட ரில்லையே. கக

திருச்சிற்றம்பலம்

---

## 40. பொது : பண் - கொல்லி

### தனித்திருவிருக்குக்குறள்

திருச்சிற்றம்பலம்

கல்லால்நீழல், அல்லாத்தேவை
நல்லார்பேணார், அல்லோநாமே. க

கொன்றைசூடி, நின்றதேவை
அன்றியொன்று, நன்றிலோமே. உ

கல்லாநெஞ்சின், நில்லானீசன்
சொல்லாதாரோ, டல்லோநாமே. ந

கூற்றுதைத்த, நீற்றினானைப்
போற்றுவார்கள், தோற்றினாரே. ச

காட்டுளாடும், பாட்டுளானை
நாட்டுளாரும், தேட்டுளாரே. ரு

தக்கன்வேள்விப், பொக்கந்தீர்த்த
மிக்கதேவர், பக்கத்தோமே. சு

பெண்ணாணாய, விண்ணோர்கோவை
நண்ணாதாரை, எண்ணோமே. எ

தூர்த்தன்வீரம், தீர்த்தகோவை
ஆர்த்தமாக, வேத்தினோமே. அ

பூவினானும், தாவினானும்
நாவினாலும், நோவினாரே. கூ

மொட்டமணர், கட்டர்தேரர்
பிட்டர்சொல்லை, விட்டுளோமே. க0

அந்தண்காழிப், பந்தன்சொல்லைச்
சிந்தைசெய்வோர், உய்ந்துளோரே. கக

திருச்சிற்றம்பலம்

## 41. திருக்கச்சியேகம்பம் : பண் - கொல்லி

### திருவிருக்குக்குறள்

திருச்சிற்றம்பலம்

கருவார்கச்சித், திருவேகம்பத்
தொருவாவென்ன, மருவாவினையே. க

மதியார்கச்சி, நதியேகம்பம்
விதியாலேத்தப், பதியாவாரே. உ

கலியார்கச்சி, மலியேகம்பம்
பலியாற்போற்ற, நலியாவினையே. ௩

வரமார்கச்சிப், புரமேகம்பம்
பரவாவேத்த, விரவாவினையே. ௪

படமார்கச்சி, இடமேகம்பத்
துடையாயென்ன, அடையாவினையே. ௫

நலமார்கச்சி, நிலவேகம்பம்
குலவாவேத்தக், கலவாவினையே. ௬

கரியின்னுரியன், திருவேகம்பன்
பெரியபுரமூன், றெரிசெய்தானே. எ

இலங்கையரசைத், துலங்கவூன்றும்
நலங்கொள்கம்பன், இலங்குசரணே. அ

மறையோனரியும், அறியாஅனலன்
நெறியேகம்பம், குறியாற்றொழுமே. ௯

பறியாத்தேரர், நெறியில்கச்சிச்
செறிகொள்கம்பம், குறுகுவோமே. ௧௦

கொச்சைவேந்தன், கச்சிக்கம்பம்
மெச்சுஞ்சொல்லை, நச்சும்புகழே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## 42. திருச்சிற்றேமம் : பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

நிறைவெண்டிங்கள் வாண்முக மாதர்பாட நீள்சடைக்
குறைவெண்டிங்கள் சூடியோ ராடல்மேய கொள்கையான்
சிறைவண்டியாழ்செய் பைம்பொழிற் பழனஞ்சூழ்சிற் றேமத்தான்
இறைவனென்றே யுலகெலா மேத்தநின்ற பெருமானே. ௧

மாகத்திங்கள் வாண்முக மாதர்பாட வார்சடைப்
பாகத்திங்கள் சூடியோ ராடல்மேய பண்டங்கன்
மேகத்தாடு சோலைசூழ் மிடைசிற்றேம மேவினான்
ஆகத்தோர்கொ ளாமையைப் பூண்டஅண்ண லல்லனே. ௨

நெடுவெண்டிங்கள் வாண்முக மாதர்பாட நீள்சடைக்
கொடுவெண்டிங்கள் சூடியோ ராடல்மேய கொள்கையான்
படுவண்டியாழ்செய் பைம்பொழிற் பழனஞ்சூழ்சிற் றேமத்தான்
கடுவெங்கூற்றைக் காலினாற் காய்ந்தகடவு ளல்லனே. ௩

கதிரார்திங்கள் வாண்முக மாதர்பாடக் கண்ணுதல்
முதிரார்திங்கள் சூடியோ ராடல்மேய முக்கணன்
எதிரார்புனலம் புன்சடை யெழிலாருஞ்சிற் றேமத்தான்
அதிரார்பைங்க ணேறுடை யாதிமூர்த்தி யல்லனே. ௪

வானார்திங்கள் வாண்முக மாதர்பாட வார்சடைக்
கூனார்திங்கள் சூடியோ ராடல்மேய கொள்கையான்
தேனார்வண்டு பண்செயுந் திருவாருஞ்சிற் றேமத்தான்
மானார்விழிநன் மாதொடும் மகிழ்ந்தமைந்த னல்லனே. ௫

பனிவெண்டிங்கள் வாண்முக மாதர்பாடப் பல்சடைக்
குனிவெண்டிங்கள் சூடியோ ராடல்மேய கொள்கையான்
தனிவெள்விடையன் புள்ளினத் தாமஞ்சூழ்சிற் றேமத்தான்
முனிவுமூப்பு நீக்கிய முக்கண்மூர்த்தி யல்லனே. ௬

இளருந்திங்கள் வாண்முக மாதர்பாடக் கேடிலா
வளருந்திங்கள் சூடியோ ராடல்மேய மாதவன்
தளிருங்கொம்பு மதுவுமார் தாமஞ்சூழ்சிற் றேமத்தான்
ஒளிரும்வெண் ணூல் மார்பனென் னுள்ளத்துள்ளானல்லனே.

சூழ்ந்ததிங்கள் வாண்முக மாதர்பாடச் சூழ்சடைப்
போழ்ந்ததிங்கள் சூடியோ ராடல்மேய புண்ணியன்
தாழ்ந்தவயற்சிற் றேமத்தான் தடவரையைத்தன் தாளினால்
ஆழ்ந்தஅரக்க னொல்கஅன் றடர்த்தஅண்ண லல்லனே. அ

தணிவெண்டிங்கள் வாண்முக மாதர்பாடத் தாழ்சடைத்
துணிவெண்டிங்கள் சூடியோ ராடல்மேய தொன்மையான்
அணிவண்ணச்சிற் றேமத்தா னலர்மேலந்த ணாளனும்
மணிவண்ணனுமுன் காண்கிலா மழுவாட்செல்வ னல்லனே.

வெள்ளைத்திங்கள் வாண்முக மாதர்பாட வீழ்சடைப்
பிள்ளைத்திங்கள் சூடியோ ராடல்மேய பிஞ்ஞகன்
உள்ளத்தார்சிற் றேமத்தா னுருவார்புத்த ரொப்பிலாக்
கள்ளத்தாரைத் தாணுக்கியுட் காந்துவைத்தா னல்லனே. ௧௦

கல்விலோத மல்குதண் கானல்சூழ்ந்த காழியான்
நல்லவாய வின்தமிழ் நவிலுஞான சம்பந்தன்
செல்வனூர்சிற் றேமத்தைப் பாடல்சீரார் நாவினால்
வல்லராகி வாழ்த்துவா ரல்லலின்றி வாழ்வரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## 43. சீகாழி : பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

சந்த மார்முலை யாள்தன கூறனார்
வெந்த வெண்பொடி யாடிய மெய்யனார்
கந்த மார்பொழில் சூழ்தரு காழியுள்
எந்தை யாரடி யென்மனத் துள்ளவே. க

மானி டம்முடை யார்வளர் செஞ்சடைத்
தேனி டங்கொளுங் கொன்றையந் தாரினார்
கானி டங்கொளுந் தண்வயற் காழியார்
ஊனி டங்கொண்டென் னுச்சியி னிற்பரே. உ

மைகொள் கண்டத்தர் வான்மதிச் சென்னியர்
பைகொள் வாளர வாட்டும் படிறனார்
கைகொள் மான்மறி யார்கடற் காழியுள்
ஐய னந்தணர் போற்ற இருக்குமே. ங

புற்றில் நாகமும் பூளையும் வன்னியுங்
கற்றை வார்சடை வைத்தவர் காழியுட்
பொற்றொ டியொ டிருந்தவர் பொற்கழல்
உற்ற போதுட னேத்தி யுணருமே. ச

நலியுங் குற்றமு நம்முட றேய்வினை
மெலியு மாறது வேண்டுதி ரேல்வெய்ய
கலிக டிந்தகை யார்கடற் காழியுள்
அலைகொள் செஞ்சடை யாரடி போற்றுமே. ரு

பெண்ணொர் கூறினர் பேயுட னாடுவர்
பண்ணு மேத்திசை பாடிய வேடத்தர்
கண்ணு மூன்றுடை யார்கடற் காழியுள்
அண்ண லாய அடிகள் சரிதையே. சு

பற்று மானு மழுவு மழகுற
முற்று மூர்திரிந் துபலி முன்னுவர்
கற்ற மாநன் மறையவர் காழியுட்
பெற்ற மேற துகந்தார் பெருமையே. எ

எடுத்த வல்லரக் கன்முடி தோளிற
அடர்த்து கந்தருள் செய்தவர் காழியுட்
கொடித்த யங்குமாற் கோயிலு ளின்புற
இடத்து மாதொடு தாமு மிருப்பரே. ௮

காலன் தன்னுயிர் வீட்டு கழலடி
மாலு நான்முகன் தானும் வனப்புற
ஓல மிட்டுமுன் தேடி யுணர்கிலாச்
சீலங் கொண்டவ னூர்திகழ் காழியே. ௯

உருவ நீத்தவர் தாமு முறுதுவர்
தருவ லாடையி னாருந் தகவிலர்
கருமம் வேண்டுதி ரேற்கடற் காழியுள்
ஒருவன் சேவடி யேயடைந் துய்ம்மினே. ௧௦

கானல் வந்துல வுங்கடற் காழியுள்
ஈன மில்லி இணையடி யேத்திடும்
ஞான சம்பந்தன் சொல்லிய நற்றமிழ்
மான மாக்கு மகிழ்ந்துரை செய்யவே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## 44. திருக்கழிப்பாலை - பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

வெந்த குங்கி லியப்புகை விம்மவே
கந்த நின்றுல வுங்கழிப் பாலையார்
அந்த மும்மள வும்மறி யாததோர்
சந்த மாலவர் மேவிய சாந்தமே. ௧

வானி லங்க விளங்கு மிளம்பிறை
தான லங்க லுகந்த தலைவனார்
கானி லங்க வருங்கழிப் பாலையார்
மான லம்மட நோக்குடை யாளொடே. ௨

கொடிகொ ளேற்றினர் கூற்றை யுதைத்தனர்
பொடிகொள் மார்பினிற் பூண்டதொ ராமையர்

கடிகொள் பூம்பொழில் சூழ்கழிப் பாலையுள்
அடிகள் செய்வன வார்க்கறி வொண்ணுமே. ௩

பண்ண லம்பட வண்டறை கொன்றையின்
தண்ண லங்கலு கந்த தலைவனார்
கண்ண லங்க வருங்கழிப் பாலையுள்
அண்ண லெங்கட வுள்ளவ னல்லனே. ௪

எரி னாருல கத்திமை யோரொடும்
பாரி னாருட னேபர வப்படுங்
காரி னார்பொழில் சூழ்கழிப் பாலையெம்
சீரி னார்கழ லேசிந்தை செய்ம்மினே. ௫

துள்ளு மான்மறி யங்கையி லேந்தியூர்
கொள்வ னாரிடு வெண்தலை யிற்பலி
கள்வ னாருறை யுங்கழிப் பாலையை
உள்ளு வார்வினை யாயின வோயுமே. ௬

மண்ணி னார்மலி செல்வமும் வானமும்
எண்ணி நீரினி தேத்துமின் பாகமும்
பெண்ணி னார்பிறை நெற்றியொ டுற்றமுக்
கண்ணி னாருறை யுங்கழிப் பாலையே ௭

இலங்கை மன்னனை யீரைந் திரட்டிதோள்
துலங்க வூன்றிய தூமழு வாளினார்
கலங்கள் வந்துல வுங்கழிப் பாலையை
வலங்கொள் வார்வினை யாயின மாயுமே. ௮

ஆட்சி யாலல ரானொடு மாலுமாய்த்
தாட்சி யாலறி யாது தளர்ந்தனர்
காட்சி யாலறி யான்கழிப் பாலையை
மாட்சி யாற்றொழு வார்வினை மாயுமே. ௯

செய்ய நுண்துவ ராடையி னாரொடு
மெய்யின் மாசு பிறக்கிய வீறிலாக்
கையர் கேண்மையெ னேகழிப் பாலையெம்
ஐயன் சேவடி யேயடைந் துய்ம்மினே. ௧0

அந்தண் காழி யருமறை ஞானசம்
பந்தன் பாய்புனல் சூழ்கழிப் பாலையைச்
சிந்தை யாற்சொன்ன செந்தமிழ் வல்லவர்
முந்தி வானுல காடன் முறைமையே. கக

திருச்சிற்றம்பலம்

---

## 45. திருஆரூர் : பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

அந்த மாயுல காதியு மாயினான்
வெந்த வெண்பொடிப் பூசிய வேதியன்
சிந்தை யேபுகுந் தான்திரு ஆரூரெம்
எந்தை தானெனை யென்றுகொ ளுங்கொலோ. க

கருத்த னேகரு தார்புர மூன்றெய்த
ஒருத்த னேயுமை யாளொரு கூறனே
திருத்த னேதிரு ஆரூரெந் தீவண்ண
அருத்த வென்னனை யஞ்சலென் றாததே. உ

மறையன் மாமுனி வன்மரு வார்புரம்
இறையின் மாத்திரை யில்லெரி யூட்டினான்
சிறைவண் டார்பொழில் சூழ்திரு ஆரூரெம்
இறைவன் றானெனை யென்றுகொ ளுங்கொலோ. ௩

பல்வி லோடுகை யேந்திப் பலிதிரிந்
தெல்வி வந்திடு காட்டெரி யாடுவான்
செல்வ மல்கிய தென்திரு ஆரூரான்
அல்லல் தீர்த்தெனை யஞ்சலெ னுங்கொலோ. ச

குருந்த மேறிக் கொடிவிடு மாதவி
விரிந்த லர்ந்த விரைகமழ் தேன்கொன்றை
திருந்து மாடங்கள் சூழ்திரு ஆரூரான்
வருந்தும் போதெனை வாடலெ னுங்கொலோ. ரு

வார்கொள் மென்முலை யாளொரு பாகமா
ஊர்க ளாரிடு பிச்சைகொ ளுத்தமன்

சீர்கொள் மாடங்கள் சூழ்திரு ஆரூரான்
ஆர்க ணுவெனை யஞ்சலெ ன்றதே. ௬

வளைக்கை மங்கைநல் லாளையோர் பாகமாத்
துளைக்கை யானை துயர்படப் போர்த்தவன்
திளைக்குந் தண்புனல் சூழ்திரு ஆரூரான்
இளைக்கும் போதெனை யேன்றுகொ ளுங்கொலோ. ௭

இலங்கை மன்ன னிருபது தோளிறக்
கலங்கக் கால்விர லாற்கடைக் கண்டவன்
வலங்கொள் மாமதில் சூழ்திரு ஆரூரான்
அலங்கல் தந்தெனை யஞ்சலெ னுங்கொலோ. ௮

நெடிய மாலும் பிரமனு நேர்கிலாப்
படிய வன்பனி மாமதிச் சென்னியான்
செடிகள் நீக்கிய தென்திரு ஆரூரெம்
அடிகள் தானெனை யஞ்சலெ னுங்கொலோ. ௯

மாசு மெய்யினர் வண்டுவ ராடைகொள்
காசை போர்க்குங் கலதிகள் சொற்கொளேல்
தேச மல்கிய தென்திரு ஆரூரெம்
ஈசன் தானெனை யேன்றுகொ ளுங்கொலோ. ௧௦

வன்னி கொன்றை மதியொடு கூவிளம்
சென்னி வைத்த பிரான்திரு ஆரூரை
மன்னு காழியுள் ஞானசம் பந்தன்வாய்ப்
பன்னு பாடல்வல் லார்க்கில்லை பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## 46. திருக்கருகாவூர் : பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

முத்தி லங்குமுறு வல்லுமை யஞ்சவே
மத்த யானைமறு கவ்வுரி வாங்கியக்
கத்தை போர்த்தகட வுள்கரு காவூரெம்
அத்தர் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. ௧

விழுத வல்லசடை யான்வினை யுள்குவார்க்
கழுத நீழலக லாததோர் செல்வமாம்
கமுத முல்லை கமழ்கின்ற கருகாவூர்
அமுதர் வண்ணமழ லுமழல் வண்ணமே. உ

பழக வல்லசிறுத் தொண்டர்பா வின்னிசைக்
குழக ரென்றுகுழை யாவழை யாவரும்
கழல்கொள் பாடலுடை யார்கரு காவூரெம்
அழகர் வண்ணமழ லுமழல் வண்ணமே. ந

பொடிமெய் பூசிமலர் கொய்துபு ணர்ந்துடன்
செடிய ரல்லாவுள்ள நல்கிய செல்வத்தர்
கடிகொள் முல்லைகம ழுங்கரு காவூரெம்
அடிகள் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. ச

மைய லின்றிமலர் கொய்துவ ணங்கிடச்
செய்ய வுள்ளம்மிக நல்கிய செல்வத்தர்
கைதன் முல்லைகம ழுங்கரு காவூரெம்
ஐயர் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. ரு

மாசில் தொண்டர்மலர் கொண்டு வணங்கிட
ஆசை யாரஅருள் நல்கிய செல்வத்தர்
காய்சி னத்தவிடை யார்கரு காவூரெம்
ஈசர் வண்ணம்மெரி யும்மெரி வண்ணமே. சு

வெந்த நீறுமெய் பூசிய வேதியன்
சிந்தை நின்றருள் நல்கிய செல்வத்தன்
கந்த மௌவல்கம ழுங்கரு காவூரெம்
எந்தை வண்ணம்மெரி யும்மெரி வண்ணமே. எ, அ

பண்ணி னேர்மொழி யாளையோர் பாகனார்
மண்ணு கோலம்முடை யம்மல ரானொடும்
கண்ண னேடஅரி யார்கரு காவூரெம்
அண்ணல் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. கூ

போர்த்த மெய்யினர் போதுழல் வார்கள்சொல்
தீர்த்த மென்றுதெளி வீர்தெளி யேன்மின்

கார்த்தண் முல்லைகம ழுங்கரு காவூரெம்
ஆத்தர் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. கO

கலவ மஞ்ஞையுல வுங்கரு காவூர்
நிலவு பாடலுடை யான்றன நீள்கழல்
குலவு ஞானசம் பந்தன செந்தமிழ்
சொலவ லாரவர் தொல்வினை தீருமே. கக

திருச்சிற்றம்பலம்

---

## 47. திருஆலவாய் : பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

காட்டு மாவ துரித்துரி போர்த்துடல்
நாட்ட மூன்றுடை யாயுரை செய்வனூன்
வேட்டு வேள்விசெய் யாஅமண் கையரை
ஓட்டி வாதுசெ யத்திரு வுள்ளமே. க

மத்த யானையி னீருரி மூடிய
அத்த னேயணி ஆலவா யாய்பணி
பொய்த்த வன்தவ வேடத்த ராஞ்சமண்
சித்த ரையழிக் கத்திரு வுள்ளமே. உ

மண்ண கத்திலும் வானிலு மெங்குமாம்
திண்ண கத்திரு ஆலவா யாயருள்
பெண்ண கத்தெழிற் சாக்கியப் பேயமண்
தெண்ணர் கற்பழிக் கத்திரு வுள்ளமே. ௩

ஓதி யோத்தறி யாஅம ணாதரை
வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே
ஆதி யேதிரு ஆலவா யண்ணலே
நீதி யாக நினைந்தருள் செய்திடே. ச

வைய மார்புக ழாயடி யார்தொழும்
செய்கை யார்திரு ஆலவா யாய்செப்பாய்
கையி லுண்டுழ லும்மண் கையரைப்
பைய வாதுசெ யத்திரு வுள்ளமே. ரு

நாறு சேர்வயல் தண்டலை மிண்டிய
தேற லார்திரு ஆலவா யாய்செப்பாய்
வீறி லாத்தவ மோட்டமண் வேடரைச்
சீறி வாதுசெ யத்திரு வுள்ளமே. சு

பண்ட டித்தவத் தார்பயில் வாற்றொழும்
தொண்ட ருக்கெளி யாய்திரு ஆலவாய்
அண்ட னேயமண் கையரை வாதினில்
செண்ட டித்துள றத்திரு வுள்ளமே. எ

அரக்கன் றன்கிரி யேற்றவன் றன்முடிச்
செருக்கி னைத்தவிர்த் தாய்திரு ஆலவாய்ப்
பரக்கு மாண்புடை யாயமண் பாவரைக்
கரக்க வாதுசெ யத்திரு வுள்ளமே. அ

மாலும் நான்முக னும்மறி யாநெறி
ஆல வாயுறை யும்மண்ண லேபணி
மேலை வீடுண ராவெற்ற ரையரைச்
சால வாதுசெ யத்திரு வுள்ளமே. கூ

கழிக்க ரைப்படு மீன்கவர் வாரமண்
அழிப்ப ரையழிக் கத்திரு வுள்ளமே
தெழிக்கும் பூம்புனல் சூழ்திரு ஆலவாய்
மழுப்ப டையுடை மைந்தனே நல்கிடே கO

செந்தெ னமுரா லுந்திரு ஆலவாய்
மைந்த னேயென்று வல்லம ணாசறச்
சந்த மார்தமிழ் கேட்டமெய்ஞ் ஞானசம்
பந்தன் சொற்பக ரும்பழி நீங்கவே. கக

திருச்சிற்றம்பலம்

## 48. திருமழபாடி : பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

அங்கை யாரழ லன்னழ கார்சடைக்
கங்கை யான்கட வுள்ளிட மேவிய
மங்கை யானுறை யும்மழ பாடியைத்
தங்கை யாற்றொழு வார்தக வாளரே. க

விதியு மாம்விளை வாமொளி யார்ந்ததோர்
கதியு மாங்கசி வாம்வசி யாற்றமா
மதியு மாம்வலி யாமழ பாடியுள்
நதியந் தோய்சடை நாதன்நற் பாதமே. உ

முழவி னான்முது காடுறை பேய்க்கணக்
குழவி னான்குல வுங்கையி லேந்திய
மழுவி னானுறை யும்மழ பாடியைத்
தொழுமி னுந்துய ரானவை தீரவே. ௩

கலையி னான்மறை யான்கதி யாகிய
மலையி னான்மரு வார்புர மூன்றெய்த
சிலையி னான்சேர் திருமழ பாடியைத்
தலையி னால்வணங் கத்தவ மாகுமே. ச

நல்வி னைப்பயன் நான்மறை யின்பொருள்
கல்வி யாயக ருத்தனு ருத்திரன்
செல்வன் மேய திருமழ பாடியைப்
புல்கி யேத்து மதுபுக ழாகுமே. ரு

நீடி னாருல குக்குயி ராய்நின்றான்
ஆடி னான்நெரி கானிடை மாநடம்
பாடி னாரிசை மாமழ பாடியை
நாடி னார்க்கில்லை நல்குர வானவே. சா

மின்னி னாரிடை யாளொரு பாகமாய்
மன்னி னானுறை மாமழ பாடியைப்
பன்னி னாரிசை யால்வழி பாடுசெய்
துன்னி னார்வினை யாயின வோயுமே. எ

தென்னி லங்கையர் மன்னன் செழுவரை
தன்னி லங்கஅ டர்த்தருள் செய்தவன்
மன்னி லங்கிய மாமழ பாடியை
உன்னி லங்க வுறுபிணி யில்லையே. அ

திருவின் நாயக னுஞ்செழுந் தாமரை
மருவி னானுந் தொழத்தழல் மாண்பமர்
உருவி னானுறை யும்மழ பாடியைப்
பரவி னார்வினைப் பற்றறுப் பார்களே. க

நலியு நன்றறி யாச்சமண் சாக்கியர்
வலிய சொல்லினு மாமழ பாடியுள்
ஒலிசெய் வார்கழ லான்திற முள்கவே
மெலியு நம்முடன் மேல்வினை யானவே. கo

மந்த முந்து பொழில்மழ பாடியுள்
எந்தை சந்த மினிதுகந் தேத்துவான்
கந்த மார்கடற் காழியுள் ஞானசம்
பந்தன் மாலைவல் லார்க்கில்லை பாவமே.

திருச்சிற்றம்பலம்

---

## 49. போது : பண் - கௌசிகம்

### நமச்சிவாயத் திருப்பதிகம்

திருச்சிற்றம்பலம்

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாதன் நாம நமச்சி வாயவே. க

நம்பு வாரவர் நாவி னவிற்றினால்
வம்பு நாண்மலர் வார்மது வொப்பது
செம்பொ னார்தில கம்முல குக்கெலாம்
நம்பன் நாம நமச்சி வாயவே. உ

*நெக்கு ளார்வ மிகப்பெரு கிந்கினந்*
*தக்கு மாலைகோ டங்கையி லெண்ணுவார்*
*தக்க வானவ ராத்தகு விப்பது*
*நக்கன் நாம நமச்சி வாயவே.* ௩

*இயமன் தூதரு மஞ்சுவ ரின்சொலால்*
*நயம்வந் தோதவல் லார்தமை நண்ணினால்*
*நியமந் தான்நினை வார்க்கினி யான்நெற்றி*
*நயனன் நாம நமச்சி வாயவே.* ௪

கோல்வா ரேனுங் குணம்பல நன்மைகள்
இல்லா ரேனு மியம்புவ ராயிடின்
எல்லாத் தீங்கையு நீங்குவ ரென்பரால்
நல்லார் நாம நமச்சி வாயவே. ௫

மந்த ரம்மன பாவங்கள் மேவிய
பந்த னையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினை செல்வமு மல்குமால்
நந்தி நாம நமச்சி வாயவே. ௬

நரக மேழ்புக நாடின ராயினும்
உரைசெய் வாயின ராயி னுருத்திரர்
விரவி யேபுகு வித்திடு மென்பரால்
வரதன் நாம நமச்சி வாயவே. ௭

*இலங்கை மன்ன னெடுத்த அடுக்கல்மேல்*
*தலங்கொள் கால்விரல் சங்கர னூன்றலும்*
*மலங்கி வாய்மொழி செய்தவ னுய்வகை*
*நலங்கொள் நாம நமச்சி வாயவே.* ௮

*போதன் போதன கண்ணனு மண்ணல்தன்*
*பாதந் தான்முடி நேடிய பண்பராய்*
*யாதுங் காண்பரி தாகி யலந்தவர்*
ஓது நாம நமச்சி வாயவே. ௯

*கஞ்சி மண்டையர் கையிலுண் கையர்கள்*
*வெஞ்சொல் மிண்டர் விரவில ரென்பரால்*

விஞ்சை யண்டர்கள் வேண்ட அமுதுசெய்
நஞ்சுண் கண்டன் நமச்சி வாயவே. க0

நந்தி நாம நமச்சிவா யவெனும்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யால்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாச மறுக்கவல் லார்களே. கக

திருச்சிற்றம்பலம்

## 50. திருத்தண்டலைநீணெறி : பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

விரும்புந் திங்களுங் கங்கையும் விம்மவே
சுரும்புந் தும்பியுஞ் சூழ்சடை யார்க்கிடம்
கரும்புஞ் செந்நெலுங் காய்கமு கின்வளம்
நெருங்குந் தண்டலை நீணெறி காண்மினே. க

இகழுங் கால னிதயத்து மென்னுளுந்
திகழுஞ் சேவடி யான்திருந் தும்மிடம்
புகழும் பூமக ளும்புணர் பூசுரர்
நிகழுந் தண்டலை நீணெறி காண்மினே. உ

பரந்த நீலப் படவெரி வல்விடம்
கரந்த கண்டத்தி னன்கரு தும்மிடம்
சுரந்த மேதி துறைபடிந் தோடையில்
நிரந்த தண்டலை நீணெறி காண்மினே. ரு

தவந்த என்புந் தவளப் பொடியுமே
உவந்த மேனியி னுறை யும்மிடம்
சிவந்த பொன்னுஞ் செழுந்தர ளங்களும்
நிவந்த தண்டலை நீணெறி காண்மினே. ச, ரு, சு, எ

இலங்கை வேந்த னிருபது தோளிற
விலங்க வில்லடர்த் தான்விரும் பும்மிடம்
சலங்கொ ளிப்பி தரளமுஞ் சங்கமும்
நிலங்கொள் தண்டலை நீணெறி காண்மினே. அ

கருவ ருந்தியின் நான்முகன் கண்ணனென்
றிருவ ருந்தெரி யாவொரு வன்னிடம்
செருவ ருந்திய செம்பியன் கோச்செங்கண்
நிருபர் தண்டலை நீணெறி காண்மினே. ௯

கலவு சீவரத் தார்கையி லுண்பவர்
குலவ மாட்டாக் குழக னுறைவிடம்
சுலவு மாமதி லுஞ்சுதை மாடமும்
நிலவு தண்டலை நீணெறி காண்மினே. ௧0

நீற்றர் தண்டலை நீணெறி நாதனைத்
தோற்று மேன்மையர் தோணி புரத்திறை
சாற்று ஞானசம் பந்தன் தமிழ்வலார்
மாற்றில் செல்வர் மறப்பர் பிறப்பையே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## 51. திருஆலவாய் : பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

செய்ய னேதிரு ஆலவாய் மேவிய
ஐய னேயஞ்ச லென்றருள் செய்யெனைப்
பொய்ய ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பைய வேசென்று பாண்டியற் காகவே. ௧

சித்த னேதிரு ஆலவாய் மேவிய
அத்த னேயஞ்ச லென்றருள் செய்யெனை
எத்த ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பத்திமன் தென்னன் பாண்டியற் காகவே. ௨

தக்கன் வேள்வி தகர்த்தரு ளாலவாய்ச்
சொக்க னேயஞ்ச லென்றருள் செய்யெனை
எக்க ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பக்க மேசென்று பாண்டியற் காகவே. ௩

சிட்ட னேதிரு ஆலவாய் மேவிய
அட்ட மூர்த்திய னேயஞ்ச லென்றருள்

துட்ட ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பட்டி மன்தென்னன் பாண்டியற் காகவே. ௪

நண்ண லார்புர மூன்றெரி யாலவாய்
அண்ண லேயஞ்ச லென்றருள் செய்யெனை
எண்ணி லாஅம ணர்கொளு வுஞ்சுடர்
பண்ணி யற்றமிழ்ப் பாண்டியற் காகவே. ௫

தஞ்ச மென்றுன் சரண்புகுந் தேனையும்
அஞ்ச லென்றரு ளாலவா யண்ணலே
வஞ்சஞ் செய்தம ணர்கொளு வுஞ்சுடர்
பஞ்ச வன்தென்னன் பாண்டியற் காகவே. ௬

செங்கண் வெள்விடை யாய்திரு ஆலவாய்
அங்க ணாஅஞ்ச லென்றருள் செய்யெனைக்
கங்கு லாரமண் கைய ரிடுங்கனல்
பங்கமில் தென்னன் பாண்டியற் காகவே. ௭

தூர்த்தன் வீரந் தொலைத்தரு ளாலவாய்
ஆத்த னேயஞ்ச லென்றருள் செய்யெனை
ஏத்தி லாஅம ணர்கொளு வுஞ்சுடர்
பார்த்தி வன்தென்னன் பாண்டியற் காகவே. ௮

தாவி னானயன் தானறி யாவகை
மேவி னாய்திரு ஆலவா யாயருள்
தூவி லாஅம ணர்கொளு வுஞ்சுடர்
பாவி னான்தென்னன் பாண்டியற் காகவே. ௯

எண்டி சைக்கெழி லாலவாய் மேவிய
அண்ட னேயஞ்ச லென்றருள் செய்யெனைக்
குண்ட ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பண்டிமன் தென்னன் பாண்டியற் காகவே. ௧௦

அப்ப னாலவா யாதி யருளினால்
வெப்பந் தென்னவன் மேலுற மேதினிக்
கொப்ப ஞானசம் பந்த னுரைபத்தும்
செப்ப வல்லவர் தீதிலாச் செல்வரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## 52. திருஆலவாய் : திருவிராகம் - பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

வீடலால வாயிலாய் விழுமியார்கள் நின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள்க டிம்மதில்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே. க

பட்டிசைந்த அல்குலாள் பாவையாளோர் பாகமா
ஒட்டிசைந்த தன்றியும் முச்சியாளொ ருத்தியாக்
கொட்டிசைந்த ஆடலாய் கூடலால வாயிலாய்
எட்டிசைந்த மூர்த்தியா யிருந்தவாறி தென்னையே. உ

குற்றநீ குணங்கள்நீ கூடலால வாயிலாய்
சுற்றநீ பிரானுநீ தொடர்ந்திலங்கு சோதிநீ
கற்றநூற் கருத்துநீ யருத்தமின்ப மென்றிவை
முற்றுநீ புகழ்ந்துமுன் னுரைப்பதென்மு கம்மனே. ௩

முதிருநீர்ச் சடைமுடி முதல்வன்நீ முழங்கழல்
அதிரவீசி யாடுவா யழகன்நீ புயங்கன்நீ
மதுரன்நீ மணாளன்நீ மதுரையால வாயிலாய்
சதுரன்நீ சதுர்முகன் கபாலமேந்து சம்புவே. ௪

கோலமாய நீள்மதிற் கூடலால வாயிலாய்
பாலனாய தொண்டுசெய்து பண்டுமின்று முன்னையே
நீலமாய கண்டனே நின்னையன்றி நித்தலும்
சீலமாய சிந்தையிற் றேர்வதில்லை தேவரே. ௫

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய் பிஞ்ஞகா பிறப்பிலீ
கொன்றையம் முடியினாய் கூடலால வாயிலாய்
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. ௬

ஆதியந்த மாயினா யாலவாயி லண்ணலே
சோதியந்த மாயினாய் சோதியுள்ளோர் சோதியாய்
கீதம்வந்த வாய்மையாற் கிளர்தருக்கி னார்க்கலால்
ஓதிவந்த வாய்மையா லுணர்ந்துரைக்க லாகுமே. எ

கறையிலங்கு கண்டனே கருத்திலாக் கருங்கடற்
றுறையிலங்கை மன்னனைத் தோளடர வூன்றினாய்
மறையிலங்கு பாடலாய் மதுரையால வாயிலாய்
நிறையிலங்கு நெஞ்சினால் நினைப்பதே நியமமே. அ

தாவணவ் விடையினாய் தலைமையாக நாடொறும்
கோவணவ் வுடையினாய் கூடலால வாயிலாய்
தீவணம் மலர்மிசைத் திசைமுகனு மாலுநின்
றூவணம் மளக்கிலார் துளக்கமெய்து வார்களே. கூ

தேற்றமில் வினைத்தொழிற் றேரருஞ் சமணரும்
போற்றிசைத்து நின்கழற் புகழ்ந்துபுண் ணியங்கொளார்
கூற்றுதைத்த தாளினாய் கூடலால வாயிலாய்
நாற்றிசைக்கு மூர்த்தியாகி நின்றதென்ன நன்மையே. க0

போயநீர் வளங்கொளும் பொருபுனற் புகலியான்
பாயகேள்வி ஞானசம் பந்தன்நல்ல பண்பினால்
ஆயசொல்லின் மாலைகொண் டாலவாயி லண்ணலைத்
தீயதீர எண்ணுவார்கள் சிந்தையாவர் தேவரே. கக

திருச்சிற்றம்பலம்

## 53. திருஆனைக்கா : திருவிராகம். பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

வானைக்காவில் வெண்மதி மல்குபுல்கு வார்சடைத்
தேனைக்காவி லின்மொழித் தேவிபாக மாயினான்
ஆனைக்காவி லண்ணலை யபயமாக வாழ்பவர்
ஏனைக்காவல் வேண்டுவோர்க் கேதுமேத மில்லையே. க

சேறுபட்ட தண்வயற் சென்றுசென்று சேணுலா
வாறுபட்ட நுண்டுறை யானைக்காவி லண்ணலார்
நீறுபட்ட மேனியார் நிகரில்பாத மேத்துவார்
வேறுபட்ட சிந்தையார் விண்ணிலெண்ண வல்லரே. உ

தாரமாய மாதரா டானோர்பாக மாயினான்
ஈரமாய புன்சடை யேற்றதிங்கள் சூடினான்

ஆரமாய மார்புடை யானைக்காவி லண்ணலை
வாரமாய் வணங்குவார் வல்வினைகள் மாயுமே. ௩

விண்ணினண்ணு புல்கிய வீரமாய மால்விடைச்
சுண்ணவெண்ணீ றாடினான் சூலமேந்து கையினான்
அண்ணல்கண்ணோர் மூன்றினா னானைக்காவு கைதொழ
எண்ணும்வண்ணம் வல்லவர்க் கேதமொன்று மில்லையே. ௪

வெய்யபாவங் கைவிட வேண்டுவீர்க ளாண்டசீர்
மைகொள் கண்டன் வெய்யதீ மாலையாடு காதலான்
கொய்யவிண்ட நாண்மலர்க் கொன்றைதுன்று சென்னியெம்
ஐயன்மேய பொய்கைசூ ழானைக்காவு சேர்மினே. ௫

நாணுமோர்வு சார்வுமுன் நகையுமுட்கு நன்மையும்
பேணுறாத செல்வமும் பேசநின்ற பெற்றியான்
ஆணும்பெண்ணு மாகிய ஆனைக்காவி லண்ணலார்
காணுங்கண்ணு மூன்றுடைக் கறைகொள்மிட றனல்லனே.

கூருமாலை நண்பகற் கூடிவல்ல தொண்டர்கள்
பேருமூருஞ் செல்வமும் பேசநின்ற பெற்றியான்
பாரும்விண்ணுங் கைதொழப் பாயுங்கங்கை செஞ்சடை
ஆரநீரோ டேந்தினா னானைக்காவு சேர்மினே. ௭

பொன்னமல்கு தாமரைப் போதுதாது வண்டினம்
அன்னமல்கு தண்டுறை ஆனைக்காவி லண்ணலைப்
பன்னவல்ல நான்மறை பாடவல்ல தன்மையோர்
முன்னவல்லர் மொய்கழல் துன்னவல்லர் விண்ணையே. ௮

ஊனொடுண்டல் நன்றெனா வூனொடுண்டல் தீதெனா
ஆனதொண்ட ரன்பினாற் பேசநின்ற தன்மையான்
வானொடொன்று சூடினான் வாய்மையாக மன்னிநின்
றானொடஞ்சு மாடினா னானைக்காவு சேர்மினே. ௯

கையிலுண்ணுங் கையருங் கடுக்கடின் கழுக்களும்
மெய்யைப்போர்க்கும் பொய்யரும் வேதநெறியை யறிகிலார்
தையல்பாக மாயினான் தழலதுருவத் தானெங்கள்
ஐயன்மேய பொய்கைசூ ழானைக்காவு சேர்மினே. ௧௦

ஊழியூழி வையகத் துயிர்கள்தோற்றும் வானோடும்
ஆழியானுங் காண்கிலா ஆனைக்காவி லண்ணலைக்
காழிஞான சம்பந்தன் கருதிச்சொன்ன பத்திவை
வாழியாகக் கற்பவர் வல்வினைகள் மாயுமே. கக

*திருச்சிற்றம்பலம்*

---

54. போது : பண் - கௌசிகம்

**திருப்பாசுரம்**

*திருச்சிற்றம்பலம்*

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே. க

அரிய காட்சிய ராய்த்தம தங்கைசேர்
எரிய ரேறுகந் தேறுவர் கண்டமும்
கரியர் காடுறை வாழ்க்கைய ராயினும்
பெரிய ராரறி வாரவர் பெற்றியே. உ

வெந்த சாம்பல் விரையெனப் பூசியே
தந்தை யாரொடு தாயிலர் தம்மையே
சிந்தி யாஎழு வார்வினை தீர்ப்பரால்
எந்தை யாரவ ரெவ்வகை யார்கொலோ. ௩

ஆட்பா லவர்க்கருளும் வண்ணமு மாதி மாண்பும்
கேட்பான் புகிலளவில்லை கிளக்க வேண்டா
கோட்பா லனவும் வினையுங் குறுகாமை யெந்தை
தாட்பால் வணங்கித் தலைநின் றிவைகேட்க தக்கார். ச

ஏதுக்க ளாலு மெடுத்த மொழியாலு மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுள னெங்கள் சோதி
மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கள் மிக்கீ ரிறையே வந்து சார்மின்களே. ரு

ஆடும் மெனவும் மருங்கூற்ற முதைத்து வேதம்
பாடு மெனவும் புகழல்லது பாவ நீங்கக்
கேடும் பிறப்பும் மறுக்கும் மெனக்கேட் டீராகில்
நாடுந் திறத்தார்க் கருளல்லது நாட்ட லாமே. ௬

கடிசேர்ந்த போது மலரான கைக்கொண்டு நல்ல
படிசேர்ந்த பால்கொண்டங் காட்டிடத் தாதை பண்டு
முடிசேர்ந்த காலையற வெட்டிட முக்கண் மூர்த்தி
அடிசேர்ந்த வண்ணம் மறிவார் சொலக் கேட்டுமன்றே. ௭

வேத முதல்வன் முதலாக விளங்கி வையம்
ஏதப் படாமை யுலகத்தவ ரேத்தல் செய்யப்
பூத முதல்வன் முதலே முதலாப் பொலிந்த
சூத னொலிமாலை யென்றே கலிக்கோவை சொல்லே. ௮

பாராழி வட்டம் பகையா னலிந்தாட்ட ஆடிப்
பேராழி யானதிடர் கண்டருள் செய்தல்பேணி
நீராழி விட்டேறி நெஞ்சிடங் கொண்டவர்க்குப்
போராழி யீந்த புகழும் புகழுற்ற தன்றே. ௯

மாலா யவனும் மறைவல்ல நான்முகனும்
பாலாய தேவர்பக ரில்லமு தூட்டல் பேணிக்
காலாய முந்நீர் கடைந்தார்க் கரிதா யெழுந்த
ஆலால முண்டங்கம ரர்க்கருள் செய்த தாமே. ௧0

அற்றன்றி யந்தண் மதுரைத்தொகை யாக்கினானும்
தெற்றென்று தெய்வந்தெளியார் கரைக்கோலைதெண்ணீர்
பற்றின்றிப் பாங்கெதிர்வி னூரவும் பண்பு நோக்கில்[ர்ப்
பெற்றொன் றுயர்த்த பெருமான் பெருமானு மன்றே. ௧௧

நல்லார்கள் சேர்புகலி ஞானசம் பந்தன் நல்ல
எல்லார் களும்பரவு மீசனை யேத்து பாடல்
பல்லார் களும்மதிக்கப் பாசுரஞ் சொன்ன பத்தும்
வல்லார்கள் வானோ ருலகாளவும் வல்ல ரன்றே. ௧௨

திருச்சிற்றம்பலம்

## 55. திருவான்மியூர் : பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

விரையார் கொன்றையினாய் விடமுண்ட மிடற்றினனே
உரையார் பல்புகழா யுமைநங்கையோர் பங்குடையாய்
திரையார் தெண்கடல்சூழ் திருவான்மி யூருறையும்
அரையா வுன்னையல்லா லடையாதென தாதரவே. க

இடியா ரேறுடையா யிமையோர்தம் மணிமுடியாய்
கொடியார் மாமதியோ டரவம்மலர்க் கொன்றையினாய்
செடியார் மாதவிசூழ் திருவான்மி யூருறையும்
அடிகே ளுன்னையல்லா லடையாதென தாதரவே. உ

கையார் வெண்மழுவா கனல்போற்றிரு மேனியனே
மையா ரொண்கணல்லா ளுமையாள்வளர் மார்பினனே
செய்யார் செங்கயல்பாய் திருவான்மி யூருறையும்
ஐயா வுன்னையல்லா லடையாதென தாதரவே. ஙு

பொன்போ லுஞ்சடைமேற் புனல்தாங்கிய புண்ணியனே
மின்போ லும்புரிநூல் விடையேறிய வேதியனே
தென்பால் வையமெலாந் திகழுந்திரு வான்மிதன்னில்
அன்பா வுன்னையல்லா லடையாதென தாதரவே. ச

கண்ணா ருந்நுதலாய் கதிர்சூழொளி மேனியின்மேல்
எண்ணார் வெண்பொடிநீ றணிவாயெழில் வார்பொழில்சூழ்
திண்ணார் வண்புரிசைத் திருவான்மி யூருறையும்
அண்ணா வுன்னையல்லா லடையாதென தாதரவே. ரு

நீதீ நின்னையல்லால் நெறியாது நினைந்தறியேன்
ஓதீ நான்மறைகள் மறையோன்தலை யொன்றினையும்
சேதீ சேதமில்லாத் திருவான்மி யூருறையும்
ஆதீ யுன்னையல்லா லடையாதென தாதரவே. சு

வானார் மாமதிசேர் சடையாய்வரை போலவரும்
கானா ரானையின்தோ லுரித்தாய்கறை மாமிடற்றாய்
தேனார் சோலைகள்சூழ் திருவான்மி யூருறையும்
ஆனா யுன்னையல்லா லடையாதென தாதரவே. எ, அ

பொறிவாய் நாகணையா னொடுபூமிசை மேயவனும்
நெறியார் நீள்கழல்மேல் முடிகாண்பரி தாயவனே
செறிவார் மாமதில்சூழ் திருவான்மி யூருறையும்
அறிவே யுன்னையல்லா லடையாதென தாதரவே. கூ

குண்டா டுஞ்சமணர் கொடுஞ்சாக்கிய ரென்றிவர்கள்
கண்டார் காரணங்கள் கருதாதவர் பேசநின்றாய்
திண்டேர் வீதியதார் திருவான்மி யூருறையும்
அண்டா வுன்னையல்லா லடையாதென தாதரவே. கO

கன்றா ருங்கமுகின் வயல்சூழ்தரு காழிதனில்
நன்றா னபுகழால் மிகுஞானசம் பந்தனுரை
சென்றார் தம்மிடர்தீர் திருவான்மி யூரதன்மேல்
குன்றா தேத்தவல்லார் கொடுவல்வினை போயறுமே. கக

திருச்சிற்றம்பலம்

---

## 56. திருப்பிரமபுரம் : பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

இறையவன் ஈசனெந்தை யிமை யோர்தொழு தேத்தநின்ற
கறையணி கண்டன்வெண்தோ டணி காதினன் காலத்தன்று
மறைமொழி வாய்மையினான் மலை யாளொடு மன்னுசென்னிப்
பிறையணி செஞ்சடையான் பிர மாபுரம் பேணுமினே. க

சடையினன் சாமவேதன் சரி கோவண வன்மழுவாட்
படையினன் பாய்புலித்தோ லுடை யான்மறை பல்கலைநூல்
உடையவ னூனமில்லி யுட னாயுமை நங்கையென்னும்
பெடையொடும் பேணுமிடம் பிர மாபுரம் பேணுமினே. உ

மாணியை நாடுகாலன் னுயிர் மாய்தரச் செற்றுக்காளி
காணிய ஆடல்கொண்டான் கலந் தூர்வழி சென்றுபிச்சை
ஊணியல் பாகக்கொண்டங் குட னேயுமை நங்கையொடும்
பேணிய கோயில்மன்னும் பிர மாபுரம் பேணுமினே ஙு

பாரிடம் விண்ணுமெங்கும் பயில்நஞ்சுப ரந்துமிண்டப்
பேரிடர்த் தேவர்கணம் பெரு மானிது காஎனலும்

ஓரிடத் தேகரந்தங் குமை நங்கையொ டும்முடனே
பேரிட மாகக்கொண்ட பிர மாபுரம் பேணுமினே. ௪

நச்சர வச்சடைமேல் நளிர் திங்களு மொன்றவைத்தங்
கச்சமெ ழுவிடைமேலழ காமழ வேந்திநல்ல
இச்சைப கர்ந்துமிக இடு மின்பலி யென்றுநாளும்
பிச்சைகொ ளண்ணல்நண்ணும் பிர மாபுரம் பேணுமினே. ரு

பெற்றவன் முப்புரங்கள் பிழை யாவண்ணம் வாளியினாற்
செற்றவன் செஞ்சடையிற் றிகழ் கங்கை தனைத்தரித்திட்
டொற்றை விடையினனு யுமை நங்கையொ டும்முடனே
பெற்றிமை யாலிருந்தான் பிர மாபுரம் பேணுமினே. ௬

வேதம விந்தவொலி விழ வின்னொலி வீணையொலி
கீதம விந்துடனே கிள ரத்திகழ் பௌவமறை
ஓதம விந்துயர்வான் முக டேறவொண் மால்வரையான்
பேதையொ டும்மிருந்தான் பிர மாபுரம் பேணுமினே. எ

இமையவ ரஞ்சியோட எதிர் வாரவர் தம்மையின்றி
அமைதரு வல்லரக்கன் னடர்த் தும்மலை யன்றெடுப்பக்
குமையது செய்துபாடக் கொற்ற வாளொடு நாள்கொடுத்திட்
டுமையொ டிருந்தபிரான் பிர மாபுர முன்னுமினே. அ

ஞால மளித்தவனும் மரி யும்மடி யோடுமுடி
காலம் பலசெலவுங் கண்டி லாமையி னாற்கதறி
ஓல மிடஅருளி யுமை நங்கையொ டும்முடனாய்
ஏல இருந்தபிரான் பிர மாபுர மேத்துமினே. ௯

துவருறு மாடையினர் தொக்க பீலியர் நக்கரையர்
அவரவர் தன்மைகள்கண் டணு கேன்மின்ன ருள்பெறுவீர்
கவருறு சிந்தையொன்றிக் கழி காலமெல் லாம்படைத்த
இவரவ ரென்றிறைஞ்சிப் பிர மாபுர மேத்துமினே. ௧0

உரைதரு நான்மறையோர் புகழ்ந் தேத்தவொண் மாதினொடும்
வரையென வீற்றிருந்தான் மலி கின்ற பிரமபுரத்
தரசினை யேத்தவல்ல அணி சம்பந்தன் பத்தும்வல்லார்
விரைதரு விண்ணுலகம் மெதிர் கொள்ள விரும்புவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## 57. திருவொற்றியூர் : பண் - பஞ்சமம்

*திருச்சிற்றம்பலம்*

*விடையவன் விண்ணுமண்ணுந் தொழநின்றவன் வெண்மழுவாட்
படையவன் பாய்புலித்தோ லுடை கோவணம் பல்கரந்தைச்
சடையவன் சாமவேதன் சசி தங்கிய சங்கவெண்டோ
டுடையவன் னூனமில்லி யுறை யும்மிட மொற்றியூரே.* க

*பாரிடம் பாணிசெய்யப் பறைக் கட்செறு பல்கணப்பேய்
சீரொடும் பாடலாட லில யஞ்சிதை யாதகொள்கைத்
தாரிடும் போர்விடையன் றலை வன்றலை யேகலனா
ஊரிடும் பிச்சைகொள்வா னுறை யும்மிட மொற்றியூரே.* உ

விளிதரு நீருமண்ணும் விசும் போடனல் காலுமாகி
அளிதரு பேரருளா னரனாகிய ஆதிமூர்த்தி
*களிதரு வண்டுபண்செய் கமழ் கொன்றையி னோடணிந்த
ஒளிதரு வெண்பிறையா னுறை யும்மிட மொற்றியூரே.* ௩

*அரவமே கச்சதாக அசைத் தானலர் கொன்றையந்தார்
விரவிவெண் ணூல்கிடந்த விரை யார்வரை மார்பனெந்தை
பரவுவார் பாவமெல்லாம் பறைத் துப்படர் புன்சடைமேல்
உரவுநீ ரேற்றபெம்மா னுறை யும்மிட மொற்றியூரே.* ச

*விலகினார் வெய்யபாவம் விதி யாலருள் செய்துநல்ல
பலகினார் மொந்தைதாளந் தகு ணிச்சமும் பாணியாலே
அலகினால் வீசிநீர்கொண் டடி மேலல ரிட்டுமுட்டா
துலகினு ரேத்தநின்றா னுறை யும்மிட மொற்றியூரே.* ரு

*கமையொடு நின்றசீரான் கழ லுஞ்சிலம் புமொலிப்பச் [யும்
சுமையொடு மேலும்வைத்தான் விரி கொன்றையுஞ் சோமனை
அமையொடு நீண்டதிண்டோ ளழ காயபொற் றோடிலங்க
உமையொடுங் கூடிநின்றா னுறை யும்மிட மொற்றியூரே.* சு

*நன்றியால் வாழ்வதுள்ளம் மூல குக்கொரு நன்மையாலே
கன்றினார் மும்மதிலுங் கரு மால்வரை யேசிலையாப்
பொன்றினார் வார்சுடலைப் பொடி நீறணிந் தாரழலம்
பொன்றினா லெய்தபெம்மா னுறை யும்மிட மொற்றியூரே.* எ

பெற்றியாற் பித்தனொப்பான் பெரு மான்கரு மானுரிதோல்
சுற்றியான் சுத்திசூலஞ் சுடர்க் கண்ணுதல் மேல்விளங்கத்
தெற்றியாற் செற்றரக்கன் னுடலைச்செழு மால்வரைக்கீழ்
ஒற்றியான் முற்றுமாள்வா னுறை யும்மிட மொற்றியூரே. அ

திருவினார் போதினானுந் திரு மாலுமோர் தெய்வமுன்னித்
தெரிவினாற் காணமாட்டார் திகழ் சேவடி சிந்தைசெய்து
பரவினார் பாவமெல்லாம் பறை யப்படர் பேரொளியோ
டொருவனாய் நின்றபெம்மா னுறை யும்மிட மொற்றியூரே. கூ

தோகையம் பீலிகொள்வார் துவர்க் கூறைகள் போர்த்துழல்
ஆகம செல்வனாரை யலர் தூற்றுதல் காரணமாக் [வார்
கூகையம் மாக்கள்சொல்லைக் குறிக் கொள்ளன்மி னேழுலகும்
ஓகைதந் தாளவல்லா னுறை யும்மிட மொற்றியூரே. க0

ஒண்பிறை மல்குசென்னி யிறை வன்னுறை யொற்றியூரைச்
சண்பையர் தந்தலைவன் தமிழ் ஞானசம் பந்தன்சொன்ன
பண்புனை பாடல்பத்தும் பர விப்பணிந் தேத்தவல்லார்
விண்புனை மேலுலகம் விருப் பெய்துவர் வீடெளிதே. கக

திருச்சிற்றம்பலம்

## 58. திருச்சாத்தமங்கை : பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

திருமலர்க் கொன்றைமாலை திளைக் கும்மதி சென்னிவைத்தீர்
இருமலர்க் கண்ணிதன்னோ டுடனாவது மேற்பதொன்றே
பெருமலர்ச் சோலைமேக முரிஞ் சும்பெருஞ் சாத்தமங்கை
அருமல ராதிமூர்த்தி அய வந்திய மர்ந்தவனே. க

பொடிதனைப் பூசுமார்பிற் புரி நூலொரு பாற்பொருந்தக்
கொடியன சாயலாளோ டுட னாவதுங் கூடுவதே
கடிமண மல்கிநாளுங் கம ழும்பொழிற் சாத்தமங்கை
அடிகள்நக் கன்பரவ அய வந்திய மர்ந்தவனே. உ

நூனலந் தங்குமார்பில் நுகர் நீறணிந் தேறதேறி
மானன நோக்கிதன்னோ டுட னாவது மாண்பதுவே

தானலங் கொண்டுமேகந் தவ ழும்பொழிற் சாத்தமங்கை
ஆனலந் தோய்ந்தஎம்மான் அய வந்திய மர்ந்தவனே. ௩

மற்றவின் மால்வரையா மதி லெய்துவெண் ணீறுபூசிப்
புற்றர வல்குலாளோ டுட னுவதும் பொறப்பதுவே
கற்றவர் சாத்தமங்கை நகர் கைதொழச் செய்தபாவம்
அற்றவர் நாளுமேத்த அய வந்திய மர்ந்தவனே. ௪

வெந்தவெண் ணீறுபூசி விடை யேறிய வேதகீதன்
பந்தண வும்விரலா ளுட னுவதும் பாங்கதுவே
சந்தமா றங்கம்வேதந் தரித் தார்தொழுஞ் சாத்தமங்கை
அந்தமா யாதியாகி அய வந்திய மர்ந்தவனே. ௫

வேதமாய் வேள்வியாகி விளங் கும்பொருள் வீடதாகிச்
சோதியாய் மங்கைபாகந் நிலை தான்சொல்ல லாவதொன்றே
சாதியால் மிக்கசீராற் றகு வார்தொழுஞ் சாத்தமங்கை
ஆதியாய் நின்றபெம்மான் அய வந்திய மர்ந்தவனே. ௬

இமயமெல் லாமிரிய மதி லெய்துவெண் ணீறுபூசி
உமையையோர் பாகம்வைத்த நிலை தானுன்ன லாவதொன்றே
சமயமா றங்கம்வேதந் தரித் தார்தொழுஞ் சாத்தமங்கை
அமையவே றோங்குசீரான் அய வந்திய மர்ந்தவனே. ௭

பண்ணுலாம் பாடல்வீணை பயில் வானோர்ப ரமயோகி
விண்ணுலா மால்வரையான் மகள் பாகமும் வேண்டினையே
தண்ணிலா வெண்மதியந் தவ ழும்பொழிற் சாத்தமங்கை
அண்ணலாய் நின்றஎம்மான் அய வந்திய மர்ந்தவனே. ௮

பேரெழிற் றோளரக்கன் வலி செற்றதும் பெண்ணோர்பாகம்
ஈரெழிற் கோலமாகி யுட னுவது மேற்பதொன்றே
காரெழில் வண்ணனோடு கன கம்மனை யானுங்காணா
ஆரழல் வண்ணமங்கை அய வந்திய மர்ந்தவனே. ௯

கங்கையோர் வார்சடைமே லடை யப்புடை யேகமழும்
மங்கையோ டொன்றிநின்றம் மதி தான்சொல்ல லாவதொன்
சங்கையில் லாமறையோ ரவர் தாந்தொழு சாத்தமங்கை [றே
அங்கையிற் சென்னிவைத்தாய் அய வந்திய மர்ந்தவனே. ௧0

மறையினார் மல்குகாழித் தமிழ் ஞானசம் பந்தன்மன்னும்
நிறையினார் நீலநக்கன் நெடு மாநக ரென்று தொண்டர்
அறையுமூர் சாத்தமங்கை அய வந்திமே லாய்ந்தபத்தும்
முறைமையா லேத்தவல்லா ரிமை யோரிலும் முந்துவரே. கக

திருச்சிற்றம்பலம்

## 59. திருக்குடமூக்கு : பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

அரவிரி கோடனீட லணி காவிரி யாற்றயலே
மரவிரி போதுமௌவல் மண மல்லிகை கள்ளவிழும்
குரவிரி சோலைசூழ்ந்த குழகன்குட மூக்கிடமா
இரவிரி திங்கள்சூடி யிருந்தானவ னெம்மிறையே. க

ஓத்தர வங்களோடு மொலி காவிரி யாற்றயலே
பூத்தர வங்களோடும் புகை கொண்டடி போற்றிநல்ல
கூத்தர வங்களோவாக் குழ கன்குட மூக்கிடமா
ஏத்தர வங்கள்செய்ய இருந் தானவ னெம்மிறையே. உ

மயில்பெடை புல்கியால மணல் மேல்மட அன்னமல்கும்
பயில்பெடை வண்டுபண்செய் பழங் காவிரிப்பைம்பொழில்
குயில்பெடை யோடுபாட லுடை யான்குட மூக்கிடமா [வாய்க்
இயலொடு வானமேத்த இருந் தானவ னெம்மிறையே. ங

மிக்கரை தாழவேங்கை யுரி யார்த்துமை யாள்வெருவ
அக்கர வாமையேன மருப் போடவை பூண்டழகார்
கொக்கரை யோடுபாட லுடை யான்குட மூக்கிடமா
எக்கரை யாருமேத்த இருந் தானவ னெம்மிறையே. ச

வடிவுடை வாட்டடங்கண் ணுமை யஞ்சவோர் வாரணத்தைப்
பொடியணி மேனிமூட வுரி கொண்டவன் புன்சடையான்
கொடிநெடு மாடமோங்கும் குழ கன்குட மூக்கிடமா
இடிபடு வானமேத்த இருந் தானவ னெம்மிறையே. ரு

கழைவளர் கவ்வைமுத்தங் கமழ் காவிரி யாற்றயலே
தழைவளர் மாவின்நல்ல பல வின்கனி கள்தயங்கும்

குழைவளர் சோலைசூழ்ந்த குழ கன்குட மூக்கிடமா
இழைவளர் மங்கையோடு மிருந் தானவ னெம்மிறையே. ௬

மலைமலி மங்கைபாகம் மகிழ்ந் தானெழில் வையமுய்யச்
சிலைமலி வெங்கணையாற் சிதைத் தான்புர மூன்றினையும்
குலைமலி தண்பலவின் பழம் வீழ்குட மூக்கிடமா
இலைமலி சூலமேந்தி யிருந் தானவ னெம்மிறையே. ௭

நெடுமுடி பத்துடைய நிகழ் வாளரக் கன்னுடலைப்
படுமிடர் கண்டயரப் பரு மால்வரைக் கீழடர்த்தான்
கொடுமடல் தங்குதெங்கு பழம் வீழ்குட மூக்கிடமா
இடுமண லெக்கர்சூழ இருந் தானவ னெம்மிறையே. ௮

ஆரெரி யாழியானு மல ரானு மளப்பரிய
நீரிரி புன்சடைமேல் நிரம் பாமதி சூடிநல்ல
கூரெரி யாகிநீண்ட குழ கன்குட மூக்கிடமா
ஈரிரு கோவணத்தோ டிருந் தானவ னெம்மிறையே. ௯

மூடிய சீவரத்தார் மூது மட்டையர் மோட்டமணர்
நாடிய தேவரெல்லா நயந் தேத்திய நன்னலத்தான்
கூடிய குன்றமெல்லா முடை யான்குட மூக்கிடமா
ஏடலர் கொன்றைசூடி யிருந் தானவ னெம்மிறையே. ௧௦

வெண்கொடி மாடமோங்கு விறல் வெங்குரு நன்னகரான்
நண்பொடு நின்றசீரான் தமிழ் ஞானசம் பந்தனல்ல
தண்குட மூக்கமர்ந்தா னடி சேர்தமிழ் பத்தும்வல்லார்
விண்புடை மேலுலகம் வியப் பெய்துவர் வீடெளிதே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## 60. திருவக்கரை : பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

கறையணி மாமிடற்றான் கரி காடரங் காவுடையான்
பிறையணி கொன்றையினா னொரு பாகமும் பெண்ணமர்ந்தா
மறையவன் றன்தலையிற் பலி கொள்பவன் வக்கரையில் [ன்
உறைபவ னெங்கள்பிரா னொலி யார்கழ லுள்குதுமே. ௧

கருடரு கண்டத்தெங் கயிலையாரும்
அருளனூ ரூராதி யானைக்காவே. ௪

மதுசூதனன் நான்முகன் வணங்கரியார்
மதியது சொல்லிய மயேந்திரரும்
கதிர்முலை புல்கிய கயிலையாரும்
அதியனூ ரூராதி யானைக்காவே. ௫

சக்கரம் வேண்டுமால் பிரமன்காணூ
மிக்கவர் கயிலை மயேந்திரரும்
தக்கனைத் தலையரி தழலுருவர்
அக்கணி யவராரூ ரானைக்காவே. ௬

கண்ணனும் நான்முகன் காண்பரியார்
வெண்ணாவல் விரும்பு மயேந்திரரும்
கண்ணப்பர்க் கருள்செய்த கயிலையெங்கள
அண்ணலா ரூராதி யானைக்காவே. ௭

கடல்வண்ணன் நான்முகன் காண்பரியார்
தடவரை யரக்கனைத் தலைநெரித்தார்
விடமது வுண்டவெம் மயேந்திரரும்
அடல்விடையா ரூராதி யானைக்காவே. ௮

ஆதிமா லயனவர் காண்பரியார்
வேதங்கள் துதிசெயு மயேந்திரரும்
காதிலோர் குழையுடைக் கயிலையாரும்
ஆதியா ரூரெந்தை யானைக்காவே. ௯

அறிவி லமண்புத்த ரறிவுகொள்ளேல்
வெறியமான் கரத்தாரூர் மயேந்திரரும்
மறிகட லோனயன் தேடத்தானும்
அறிவரு கயிலையோ னானைக்காவே. ௧0

ஏனமா லயனவர் காண்பரியார்
கானமார் கயிலைநன் மயேந்திரரும்
ஆனஆ ரூராதி யானைக்காவை
ஞானசம் பந்தன் தமிழ்சொல்லுமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## 110. திருப்பிரமபுரம் - ஈரடி. பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

வரமதேகொளா வுரமதேசெயும் புரமெரித்தவன் பிரமநற்பு
தரனுமமே பரவுவார்கள்சீர் விரவுநீள் புவியே. [ரத்

சேனுலாமதில் வேணுமண்ணுளோர் காணமன்றலார் வேணு
தாணுவின்கழல் பேணுகின்றவ ராணியோத் தவரே. [நற்புரத்

அகலமார்தரைப்புகலுநான்மறைக்கிகலியோர்கள்வாழ்புகலி
பகல்செய்வோனெதிர்ச் சகலசேகர னகிலநாயகனே. [மாநகர்ப்

துங்கமாகரி பங்கமாவடுஞ் செங்கையானிகழ் வெங்குருத்திகழ்
அங்கணனடி தங்கையாற் றொழத் தங்குமோ வினையே. ௪

காணியொண்பொருட்கற்றவர்க்கீகையுடைமையோரவர்காதல்
றோணிவண்புரத் தாணியென்பவர் தூமதியினரே. [செய்யுநற்

ஏந்தராவெதிர் வாய்ந்தநுண்ணிடைப்பூந்தணோதியாள்சேர்ந்தபங்கின
பூந்தராய்தொழு மாந்தர்மேனிமேற் சேர்ந்திரா வினையே. [ன்

சுரபுரத்தினைத் துயர்செய்தாரகன் றுஞ்சவெஞ்சினக்காளியைத்தருஞ்
சிரபுரத்துளா னென்னவல்லவர் சித்திபெற் றவரே. எ

உறவுமாகியற் றவர்களுக்குமா நிதிகொடுத்துநீள் புவியிலங்கு
புறவமாநகர்க் கிறைவனேயெனத் தெறகிலா வினையே. [சீர்ப்

பண்புசேரிலங் கைக்குநாதனன்முடிகள்பத்தையுங்கெடநெரித்தவன்
சண்பையாதியைத் தொழுமவர்களைச் சாதியா வினையே. கூ

ஆழியங்கையிற் கொண்டமாலய னறிவொணாததோர் வடிவுகொண்ட
காழிமாநகர்க் கடவுள்நாமமே கற்றல்நற் றவமே. [வன்

விச்சையொன்றிலாச் சமணர்சாக்கியப் பிச்சர்தங்களைக் கரிசறுத்தவ
கொச்சைமாநகர்க் கன்புசெய்பவர் குணங்கள்கூ றுமினே. [ன்

கழுமலத்தினுட்கடவுள்பாதமேகருதுஞானசம் பந்தனின்தமி
முழுதும்வல்லவர்க் கின்பமேதரு முக்கணெம் மிறையே. [ழ்

திருச்சிற்றம்பலம்

## 111. திருவீழிமிழலை - ஈரடி. பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

வேலினேர்தரு கண்ணினாளுமை பங்கனங்கணன் மிழலைமா
ஆலநீழலின் மேவினானடிக் கன்பர்துன் பிலரே. [நகர்

விளங்குநான்மறை வல்லவேதியர்மல்குசீர்வளர்மிழலையானடி
உளங்கொள்வார்தமை யுளங்கொள்வார்வினைஒல்லையாசறுமே.

விசையினோடெழு பசையுநஞ்சினை யசைவுசெய்தவன் மிழலைமாநகர்
இசையுமீசனை நசையின்மேவினான் மிசைசெயா வினையே. ௩

வென்றிசேர்கொடி மூடுமாமதில் மிழலைமாநகர் மேவிநாள்தொ
நின்றஆதிதன் னடிநினைப்பவர் துன்பமொன் றிலரே. [றும்

போதகந்தனை யுரிசெய்தோன்புய னேர்வரும்பொழில் மிழலை
ஆதரஞ்செய்த அடிகள்பாதம லாலோர்பற் றிலமே. [மாநகர்

தக்கன்வேள்வியைச் சாடினார்மணி தொக்கமாளிகை மிழலைமே
நக்கனாரடி தொழுவர்மேல்வினை நாள்தொறுங் கெடுமே. [விய

போரணாவுமுப்புரமெரித்தவன்பொழில்கள்சூழ்தருமிழலைமா
சேருமீசனைச் சிந்தைசெய்பவர் தீவினை கெடுமே. [நகர்ச்

இரக்கமிஃறொழி லரக்கனாருடல் நெருக்கினான்மிகு மிழலையா
சிரக்கொள்பூவென ஒருக்கினார்புகழ் பரக்குநீள் புவியே. [னடி

துன்றுபூமகன் பன்றியானவ னொன்றுமோர்கிலா மிழலையா
சென்றுபூம்புனல் நின்றுதூவினார் நன்றுசேர் பவரே. [னடி

புத்தர்கைச்சமண்பித்தர்பொய்க்குலைவைத்தவித்தகன்மிழலைமாநகர்
சித்தம்வைத்தவ ரித்தலத்தினுள் மெய்த்தவத் தவரே. ௧௦

சந்தமார்பொழில் மிழலையீசனைச் சண்பைஞானசம்பந்தன்வாய்நவில்
பந்தமார்தமிழ் பத்தும்வல்லவர் பத்தரா குவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## 112. திருப்பல்லவனீச்சரம் : ஈரடி. பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

பரசுபாணியர் பாடல்வீணையர் பட்டினத்துறை பல்லவனீச்
தரசுபேணிநின் றாரிவர்தன்மை யறிவாரார். [சரத்

பட்டநெற்றியர் நட்டமாடுவர் பட்டினத்துறை பல்லவனீச்ச
திட்டமாயிருப் பாரிவர்தன்மை யறிவாரார். [ரத்

பவளமேனியர் திகழுநீற்றினர் பட்டினத்துறை பல்லவ
தழகராயிருப் பாரிவர்தன்மை யறிவாரார். [னீச்சரத்

பண்ணில்யாழினர் பயிலுமொந்தையர் பட்டினத்துறை பல்ல
தண்ணலாயிருப் பாரிவர்தன்மை யறிவாரார். [வனீச்சரத்

பல்லிலோட்டினர் பலிகொண்டுண்பவர் பட்டினத்துறை பல்ல
தெல்லியாட்டுகந் தாரிவர்தன்மை யறிவாரார். [வனீச்சரத்

பச்சைமேனியர் பிச்சைகொள்பவர் பட்டினத்துறை பல்லவ
திச்சையாயிருப் பாரிவர்தன்மை யறிவாரார். [னீச்சரத்

பைங்கணேற்றினர் திங்கள்சூடுவர் பட்டினத்துறை பல்லவ
தெங்குமாயிருப் பாரிவர்தன்மை யறிவாரார். [னீச்சரத்

பாதங்கைதொழ வேதமோதுவர் பட்டினத்துறை பல்லவ
தாதியாயிருப் பாரிவர்தன்மை யறிவாரார். [னீச்சரத்

படிகொள்மேனியர் கடிகொள்கொன்றையர் பட்டினத்துறை
தடிகளாயிருப் பாரிவர்தன்மை யறிவாரார். [பல்லவனீச்சரத்

பறைகொள்பாணியர் பிறைகொள்சென்னியர் பட்டினத்துறை
திறைவராயிருப்பாரிவர்தன்மையறிவாரார். [பல்லவனீச்சரத்

வானமாள்வதற் கூனமொன்றிலை மாதர்பல்லவ னீச்சரத்தா
ஞானசம்பந்தன் நற்றமிழ்சொல்ல வல்லவர் நல்லவரே. [னை

திருச்சிற்றம்பலம்

## 113. திருக்கழுமலம் : திருவியமகம். பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

உற்றுமை சேர்வது மெய்யினையே யுணர்வது நின்ன
ருள் மெய்யினையே, கற்றவர் காய்வது காமனையே கனல்விழி
காய்வது காமனையே, அற்ற மறைப்பது முன்பணியே
அமரர்கள் செய்வது முன்பணியே, பெற்று முகந்தது கந்த
னையே பிரம புரத்தை யுகந்தனையே. க

சதிமிக வந்த சலந்தரனே தடிசிர நேர்கொள் சலந்
தரனே, அதிரொளி சேர்திகி ரிப்படையா லமர்ந்தன ரும்பர்
துதிப்படையால், மதிதவழ் வெற்பது கைச்சிலையே மருவிட
மேற்பது கைச்சிலையே, விதியினி விட்டவி ரும்பரனே
வேணு புரத்தைவி ரும்பரனே. உ

காதம ரத்திகழ் தோடினனே கானவ னாய்க்கடி தோடி
னனே, பாதம தாற்கூற் றுதைத்தனனே பார்த்த னுட
லம் புதைத்தனனே, தாதவிழ் கொன்றை தரித்தனனே
சார்ந்த வினைய தரித்தனனே, போத மமரு முரைப்
பொருளே புகலி யமர்ந்த பரம்பொருளே. ௩

மைத்திகழ் நஞ்சுமிழ் மாசுணமே மகிழ்ந்தரை சேர்வது
மாசுணமே, மெய்த்துடல் பூசுவர் மேன்மதியே வேதம தோது
வர் மேன்மதியே, பொய்த்தலை யோடுறு மத்தமதே புரிசடை
வைத்தது மத்தமதே, வித்தக ராகிய வெங்குருவே விரும்
பிய மர்ந்தனர் வெங்குருவே. ச

உடன்பயில் கின்றனன் மாதவனே யுறுபொறி காய்ந்
திசை மாதவனே, திடம்பட மாமறை கண்டனனே திரிகுண
மேவிய கண்டனனே, படங்கொ ளரவரை செய்தனனே
பகடுரி கொண்டரை செய்தனனே, தொடர்ந்த துயர்க்கொரு
நஞ்சிவனே தோணிபு ரத்துறை நஞ்சிவனே. ரு

திகழ்கைய தும்புகை தங்கழலே தேவர் தொழுவதுந்
தங்கழலே, இகழ்பவர் தாமொரு மானிடமே யிருந்தனு
வோடெழில் மானிடமே, மிகவரு நீர்கொளு மஞ்சடையே

மின்னிகர் கின்றது மஞ்சடையே, தகவிர தங்கொள்வர் சுந்தரரே தக்கத ராயுறை சுந்தரரே. ௬

ஓர்வரு கண்க ளிணைக்கயலே யுமையவள் கண்க ளிணைக்கய
ஏர்மரு வுங்கழ லுகமதே யெழில்கொளு தாசனலுகமதே[லே
நீர்வருகொந்தள கங்கையதே நெடுஞ்சடை மேவிய கங்கைய
சேர்வரு யோகதி யம்பகனே சிரபுர மேயதி யம்பகனே.[தே

ஈண்டு துயிலம ரப்பினனே யிருங்கணி டந்தடி யப்பினனே
தீண்டல ரும்பரி சக்கரமே திகழ்ந்தொளி சேர்வது சக்கரமே
வேண்டிவ ருந்தந கைத்தலையே மிகைத்தவ ரோடுந கைத்தலையே
பூண்டனர் சேரலு மாபதியே புறவ மமர்ந்தவு மாபதியே. ௮

நின்மணி வாயது நீழலையே நேசம தானவர் நீழலையே
உன்னிம னத்தெழு சங்கமதே யொளியத னோடுறு சங்கமதே
கன்னிய ரைக்கவ ருங்களனே கடல்விட முண்டக ருங்களனே
மன்னிவ ரைப்பதி சண்பையதே வாரிவ யன்மலி சண்பையதே.

இலங்கை யரக்கர் தமக்கிறையே யிடந்துகயிலை யெடுக்கிறையே
புலன்கள் கெடவுடன் பாடினனே பொறிகள் கெடவுடன்பாடினனே
இலங்கியமேனி யிராவணனே யெய்துபெயரு மிராவணனே
கலந்தருள் பெற்றது மாவசியே காழி யரனடி மாவசியே. ௧௦

கண்ணிகழ் புண்டரி கத்தினனே கலந்திரி புண்டரி கத்தினனே, மண்ணிக ழும்பரி சேனமதே வானக மேய்வகை சேனமதே, நண்ணி யடிமுடி யெய்தலரே நளிர்மலி சோலையி லெய்தலரே, பண்ணியல் கொச்சை பசுபதியே பசுமிக லூர்வர் பசுபதியே. ௧௧

பருமதில் மதுரைமன் னவையெதிரே பதிகம தெழுதிலை யவையெதிரே, வருநதி யிடைமிசை வருகரனே வசையொடு மலர்கெட வருகரனே, கருதலி லிசைமுரல் தருமருளே கழுமல மமரிறை தருமருளே, மருவிய தமிழ்விர கனமொழியே வல்லவர் தம்மிடர் திடமொழியே. ௧௨

திருச்சிற்றம்பலம்

---

## 114. திருக்கச்சியேகம்பம் :

### திருவியமகம். பண் - பழம்பஞ்சுரம்

*திருச்சிற்றம்பலம்*

பாயுமால்விடை மேலொரு பாகனே பாவைதனுரு மேலொருபாகனே, தூயவானவர் வேதத் துவனியே சோதி மாலெரி வேதத்துவனியே, ஆயுநன்பொருள் நுண்பொரு ளாதியே ஆலநீழ லரும்பொரு ளாதியே, காயவின்மதன் பட்டது கம்பமே கண்ணுதற்பர மற்கிடங் கம்பமே. க

சடையணிந்ததும் வெண்டலை மாலையே தம்முடம்பிலும் வெண்டலை மாலையே, படையிலங்கையிற் சூலம தென்பதே பரந்திலங்கையிற் சூலம தென்பதே, புடைபரப்பன பூதக ணங்களே போற்றிசைப்பன பூதக ணங்களே, கடைகள் தோறு மிரப்பது மிச்சையே கம்பமேவியி ருப்பது மிச்சையே. உ

வெள்ளெருக்கொடு தும்பைமி லைச்சியே வேறுமுன் செலத் தும்பைமி லைச்சியே, அள்ளிநீறது பூசுவ தாகமே யானமாசுண மூசுவ தாகமே, புள்ளியாடை யுடுப்ப தகத்துமே போனவூழி யுடுப்ப தகத்துமே, கள்ளுலாமலர்க் கம்ப மிருப்பதே காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. ௩

முற்றலாமை யணிந்த முதல்வரே மூரியாமை யணிந்த முதல்வரே, பற்றிவாளர வாட்டும் பரிசரே பாலுநெய்யுகந் தாட்டும் பரிசரே, வற்றலோடு கலம்பலி தேர்வதே வானினோடு கலம்பலி தேர்வதே, கற்றிலாமனங் கம்ப மிருப்பதே காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. ௪

வேடனாகி விசையற் கருளியே வேலைநஞ்ச மிசையற் கருளியே, ஆடுபாம்பரை யார்த்த துடையதே யஞ்சுபூதமு மார்த்த துடையதே, கோடுவான்மதிக் கண்ணி யழகிதே குற்றமின்மதிக் கண்ணி யழகிதே, காடுவாழ்பதி யாவது மும்மதே கம்பமாபதி யாவது மும்மதே. ௫

இரும்புகைக்கொ டிதங்கழல் கையதே யிமயமாமகள் தங்கழல் கையதே, அரும்புமொய்த்த மலர்ப்பொறை தாங்

கியே ஆழியான்றன் மலர்ப்பொறை தாங்கியே, பெரும்பகல் நட மாடுதல் செய்துமே பேதைமார்மனம் வாடுதல் செய் துமே, கரும்புமொய்த்தெழு கம்ப மிருப்பதே காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. ௬

முதிரமங்கை தவஞ்செய்த காலமே முன்புமங்கை தவஞ்செய்த காலமே, வெதிர்களோடகில் சந்தமு ருட்டியே வேழமோடகில் சந்த முருட்டியே, அதிரவாறு வரத்தழு வத்தொடே யானெயாடு வரத்தழு வத்தொடே, கதிர் கொள்பூண்முலைக் கம்ப மிருப்பதே காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. ௭

பண்டரக்க னெடுத்த பலத்தையே பாய்ந்தரக்க னெடு த்த பலத்தையே, கொண்டரக்கிய துங்கால் விரலையே கோள ரக்கிய தூங்கால் விரலையே, உண்டுழன்றது முண்டத் தலை யிலே யுடுபதிக்கிட முண்டத் தலையிலே, கண்டநஞ்ச மடக் கினை கம்பமே கடவுள்நீயிடங் கொண்டது கம்பமே. ௮

தூணியான சுடர்விடு சோதியே சுத்தமான சுடர்விடு சோதியே, பேணியோடு பிரமப் பறவையே பித்தனை பிர மப் பறவையே, சேணினோடு கீழூழி திரிந்துமே சித்தமோடு கீழூழி திரிந்துமே, காணநின்றன ருற்றது கம்பமே கடவுள் நீயிட முற்றது கம்பமே. ௯

ஓருடம்பினை யீருரு வாகவே யுன்பொருள்திற மீருரு வாகவே, ஆருமெய்தற் கரிது பெரிதுமே ஆற்றவெய்தற் கரிது பெரிதுமே, தேரரும்மறி யாதுதி கைப்பரே சித்தமும் மறி யாதுதி கைப்பரே, கார்நிறத்தம ணர்க்கொரு கம்பமே கடவுள்நீயிடங் கொண்டது கம்பமே. ௰

கந்தமார்பொழில் சூழ்தரு கம்பமே காதல்செய்பவர் தீர்த்திடு கம்பமே, புந்திசெய்து விரும்பிப்பு கலியே பூசுரன் றன் விரும்பிப்பு கலியே, அந்தமில்பொரு ளாயின கொண் டுமே யண்ணலின்பொரு ளாயின கொண்டுமே, பந்தனின் னியல் பாடிய பத்துமே பாடவல்லவ ராயின பத்துமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## 115. திருஆலவாய் : திருவியமகம். பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

ஆலநீழ லுகந்ததி ருக்கையே யானபாட லுகந்ததி ருக்கையே, பாலினேர்மொழி யாளொரு பங்கனே பாதமோதலர் சேர்புர பங்கனே, கோலநீறணி மேதகு பூதனே கோதிலார்மன மேவிய பூதனே, ஆலநஞ்சமு துண்டகளத்தனே ஆலவாயுறை யண்டர்களத்தனே. க

பாதியாவுடன் கொண்டது மாலையே பாம்புதார்மலர்க் கொன்றைநன் மாலையே, கோதில்நீறது பூசிடு மாகனே கொண்டநற்கையின் மானிட மாகனே, நாதன்நாள்தொறு மாடுவ தானையே நாடியன்றுரி செய்தது மானையே, வேதநூல் பயில் கின்றது வாயிலே விகிர்தனூர்திரு ஆலநல் வாயிலே.

காடுநீட துறப்பல கத்தனே காதலால்நினை வார்தம கத்தனே, பாடுபேயொடு பூதம சிக்கவே பல்பிணத்தசை நாடிய சிக்கவே, நீடுமாநட மாடவி ருப்பனே நின்னடித்தொழ நாளுமி ருப்பனே, ஆடல்நீள்சடை மேவிய அப்பனே ஆலவாயினின் மேவிய அப்பனே. ங

பண்டயன்தலை யொன்று மறுத்தியே பாதமோதினர் பாவ மறுத்தியே, துண்டவெண்பிறை சென்னியி ருத்தியே தூயவெள்ளெரு தேறியி ருத்தியே, கண்டுகாமனை வேவவி ழித்தியே காதலில்லவர் தம்மையி ழித்தியே, அண்டநாயக னேமிகு கண்டனே ஆலவாயினின் மேவிய கண்டனே. ச

சென்றுதாதை யுகுத்தனன் பாலையே சீறியன்பு செகுத்தனன் பாலையே, வென்றிசேர்மழுக் கொண்டுமுன் காலையே வீடவெட்டிடக் கண்டுமுன் காலையே, நின்றமாணியை யோடின கங்கையால் நிலவமல்கி யுதித்தன கங்கையால், அன்றுநின் னுருவாகத்த டவியே ஆலவாயர னுகத்த டவியே.

நக்கமேகுவர் நாடுமோ ரூருமே நாதன்மேனியின் மாசுணமூருமே, தக்கபூமனைச் சுற்றக்க ருளொடே தார

முய்த்தது பாலைற்க ருளோடே, மிக்கதென்னவன் தேவிக்க ணியையே மெல்லநல்கிய தொண்டர்க்க ணியையே, அக்கி னூமு துண்கல னோடுமே ஆலவாயர னுருமை யோடுமே. ௬

வெய்யவன்பல் லுகுத்தது குட்டியே வெங்கண்மாசு ணங் கையது குட்டியே, ஐயனேயன லாடிய மெய்யனே யன்பினால்நினை வார்க்கருள் மெய்யனே, வையமுய்யஅன் றுண்டது காளமே வள்ளல்கையது மேவுகங் காளமே, ஐய மேற்பது ரைப்பது வீணையே ஆலவாயரன் கையது வீணையே. ௭

தோள்கள்பத்தொடு பத்துமயக்கியே தொக்கதேவர்செ ருக்கைமயக்கியே, வாளரக்கன் நிலத்துக்க ளித்துமே வந்தமால்வரை கண்டு களித்துமே, நீள்பொருப்பை யெடுத்த வுன் மத்தனே நின்விரற்றலை யான்மத மத்தனே, ஆளுமாதிமு றித்தது மெய்கொலோ ஆலவாயர னுய்த்தது மெய் கொலோ. ௮

பங்கயத்துள நான்முகன் மாலொடே பாதநீண்முடி நேடிட மாலொடே, துங்கநற்றழ லின்னுரு வாயுமே தூய பாடல்ப யின்றது வாயுமே, செங்கயற்கணி னாரிடு பிச்சையே சென்றுகொண்டுரை செய்வது பிச்சையே, அங்கியைத்திகழ் விப்பதி டக்கையே ஆலவாயர னாதி டக்கையே. ௯

தேரரோடம ணர்க்குநல் காணையே தேவர்நாள்தொறுஞ் சேர்வது காணையே, கோரமட்டது புண்ட ரிகத்தையே கொண்டநீள்கழல் புண்டரி கத்தையே, நேரிலூர்கள ழித்தது நாகமே நீள்சடைத்திகழ் கின்றது நாகமே, ஆரமாக வுகந்தது மென்பதே ஆலவாயர னூரிட மென்பதே. ௧0

ஈனஞானிகள் தம்மொடு விரகனே யேறுபல்பொருள் முத்தமிழ் விரகனே, ஆனகாழியுள் ஞானசம் பந்தனே ஆல வாயினின் மேயசம் பந்தனே, ஆனவானவர் வாயினு ளத் தனே யன்பரானவர் வாயினு ளத்தனே, நானுரைத்தன செந்தமிழ் பத்துமே வல்லவர்க்கிவை நற்றமிழ் பத்துமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## 116. திருவீழிமிழலை : திருவியமகம். பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

துன்று கொன்றைநஞ் சடையதே தூய கண்டநஞ் சடையதே
கன்றின் மானிடக் கையதே கல்லின் மானிடக் கையதே
என்று மேறுவ திடவமே யென்னி டைப்பலி யிடவமே
நின்ற தும்மிழலை யுள்ளுமே நீரெனைச் சிறிது முள்ளுமே. க

ஓதி வாயதும் மறைகளே யுரைப்ப தும்பல மறைகளே
பாதி கொண்டதும் மாதையே பணிகின் றேன்மிகு மாதையே
காது சேர்கனங் குழையரே காத லார்கனங் குழையரே
வீதி வாய்மிகும் வேதியா மிழலை மேவிய வேதியா. உ

பாடு கின்றபண் டாரமே பத்த ரன்னபண் டாரமே
சூடு கின்றது மத்தமே தொழுத என்னையுன் மத்தமே
நீடு செய்வதுந் தக்கதே நின்ன ரைத்திகழ்ந் தக்கதே
நாடு சேர்மிழலை யூருமே நாக நஞ்சழலை யூருமே. ௩

கட்டு கின்றகழல் நாகமே காய்ந்ததும் மதன னாகமே
இட்ட மாவதிசை பாடலே யிசைந்த நூலினமர் பாடலே
கொட்டு வான்முழவம் வாணனே குலாயசீர் மிழலை வாணனே
நட்ட மாடுவது சந்தியே நானுய்தற் கிரவு சந்தியே. [னே

ஓவி லாதிடுங் கரணமே யுன்னு மென்னுடைக் கரணமே
ஏவு சேர்வுநின் னாணையே யருளி னின்னபொற் றூணையே
பாவி யாதுரை மெய்யிலே பயின்ற நின்னடி மெய்யிலே
மேவி னான்விறற் கண்ணனே மிழலை மேயமுக் கண்ணனே.

வாய்ந்த மேனியெரி வண்ணமே மகிழ்ந்து பாடுவது வண்ண
காய்ந்து வீழ்ந்தவன் காலனே கடுந டஞ்செயுங் காலனே [மே
போந்த தெம்மிடை யிரவிலே யும்மிடைக் கள்வ மிரவிலே
ஏய்ந்த தும்மிழலை யென்பதே விரும்பியே யணிவதென்பதே.

அப்பி யன்றகண் ணயனுமே யமரர் கோமகனு மயனுமே
ஒப்பி லின்றமரர் தருவதே யொண்கையா லமரர் தருவதே
மெய்ப்ப யின்றவ ரிருக்கையே மிழலை யூரும திருக்கையே
செப்புமின் னெருது மேயுமே சேர்வுமக் கெருது மேயுமே.

தான வக்குலம்வி ளக்கியே தாரகைச் செலவி ளக்கியே
வான டர்த்தகயி லாயமே வந்து மேவுகயி லாயமே
தானெ டுத்தவல் லரக்கனே தடமுடித் திரள ரக்கனே
மேன டைச்செலவி ருப்பனே மிழலை நற்பதிவி ருப்பனே. அ

காய மிக்கதொரு பன்றியே கலந்த நின்னவுரு பன்றியே
ஏய விப்புவிம யங்கவே யிருவர் தாமனம யங்கவே [னே
தூய மெய்த்திரள கண்டனே தோன்றி நின்றமணி கண்ட
மேய வித்துயில்வி லக்கணு மிழலை மேவியவி லக்கணு. சு

கஞ்சியைக் குலவு கையரே கலக்கமா ரமணர் கையரே
அஞ்ச வாதிலருள் செய்யநீ யணைந்திடும் பரிசு செய்யநீ
வஞ்சனே வரவும் வல்லையே மதித்தெ னைச்சிறிதும் வல்லையே
வெஞ்ச வின்றிவரு வித்தகா மிழலைசே ருஞ்சிறல் வித்தகா.

மேய செஞ்சடையி னப்பனே மிழலைமே வியஎன் னப்பனே
ஏயு மாசெயவி ருப்பனே யிசைந்த வாசெயவி ருப்பனே
காய வர்க்கசம் பந்தனே காழி ஞானசம் பந்தனே
வாயுரைத்த தமிழ் பத்துமே வல்லவர்க்கு மிவை பத்துமே.

திருச்சிற்றம்பலம்

---

## 117. சீகாழி : திருமாலைமாற்று. பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

யாமாமாநீ யாமாமா யாழீகாமா காணாகா
காணாகாமா காழீயா மாமாயாநீ மாமாயா. க

யாகாயாழீ காயாகா தாயாரார தாயாயா
யாயாதாரா ராயாதா காயாகாழீ யாகாயா. ௨

தாவாமூவா தாசாகா ழீநாதாநீ யாமாமா
மாமாயாநீ தாநாழீ காசாதாவா மூவாதா. ௩

நீவாவாயா காயாழீ காவாவானோ வாராமே
மேராவானோ வாவாகா ழீயாகாயா வாவாநீ. ௪

யாகாலாமே யாகாழீ யாமேதாவீ தாயாவீ
வீயாதாவீ தாமேயா ழீகாயாமே லாகாயா. ௫

மேலேபோகா மேதேழீ காலாலேகா லானாயே.
யேனாலாகா லேலாகா ழீதேமேகா போலேமே. ௬

நீயாமாநீ யேயாமா தாவேழீகா நீதானே
நேதாநீகா ழீவேதா மாயாயேநீ மாயாநீ. ௭

நேணவராவிழ யாசைழியே வேகதளேரிய ளாயுழிகா
காழியுளாயரி ளேதகவே யேழிசையாழவி ராவணனே. ௮

காலேமேலே காணீகா ழீகாலேமா லேமேபூ
பூமேலேமா லேகாழீ காணீகாலே மேலேகா. ௯

வேரியுமேணவ காழியொயே யேனைநிணேமட ளோகரதே
தேரகளோடம ணேநினையே யேயொழிகாவண மேயுரிவே. ௧௦

நேரகழாமித யாசழிதா யேனனியேனனி ளாயுழிகா
காழியுளானின யேனினயே தாழிசயாதமி ழாகரனே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## 118. திருக்கழுமலம் : பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

மடல்மலி கொன்றை துன்றுவா ளெருக்கும் வன்னியும் மத்தமுஞ் சடைமேற், படலொலி திரைகள் மோதிய கங்கைத் தலைவனார் தம்மிடம் பகரில், விடலொலி பரந்த வெண்டிரை முத்த மிப்பிகள் கொணர்ந்துவெள் ளருவிக், கடலொலி யோத மோதவந் தலைக்குங் கழுமல நகரென லாமே. ௧

மின்னிய அரவும் வெறிமலர் பலவும் விரும்பிய திங்களுந் தங்கு, சென்னிய துடையான் தேவர்தம் பெருமான் சேயிழை யோடுறை விடமாம், பொன்னியல் மணியு முரிகரி மருப்புஞ் சந்தமு முந்துவன் றிரைகள், கன்னிய ராடக் கடலொலி மலியுங் கழுமல நகரென லாமே. ௨

சீருறு தொண்டர் கொண்டடி போற்றச் செழுமலர் புனலொடு தூபந், தாருறு கொன்றை தம்முடி வைத்த சைவனார் தங்கிட மெங்கும், ஊருறு பதிக ளுலகுடன் பொங்கி யொலிபுனல் கொளவுடன் மிதந்த, காருறு செம்மை நன்மையால் மிக்க கழுமல நகரென லாமே. ௩

மண்ணினு ரேத்த வானுளார் பரச அந்தரத் தமரர்கள் போற்றப், பண்ணினு ரெல்லாம் பலபல வேட முடையவர் பயில்விட மெங்கும், எண்ணினுல் மிக்கா ரியல்பினுல் நிறைந்தா ரேந்திழை யவரொடு மைந்தர், கண்ணினு லின்பங் கண்டொளி பரக்குங் கழுமல நகரென லாமே. ௪

சுருதியான் தலையும் நாமகள் மூக்குஞ் சுடரவன் கரமுமுன் னியங்கு, பரிதியான் பல்லு மிறுத்தவர்க் கருளும் பரமனார் பயின்றினி திருக்கை, விருதினன் மறையு மங்கமோ ராறும் வேள்வியும் வேட்டவர் ஞானங், கருதினு ருலகிற் கருத்துடை யார்சேர் கழுமல நகரென லாமே. ௫

புற்றில்வா ளரவு மாமையும் பூண்ட புனிதனார் பனிமலர்க் கொன்றை, பற்றிவான் மதியஞ் சடையிடை வைத்த படிறனார் பயின்றினி திருக்கை, செற்றுவன் திரைக ளொன்றொடொன் றோடிச் செயிர்த்துவண் சங்கொடு வங்கங், கற்றுறை வரைகள் கரைக்குவந் துரைக்குங் கழுமல நகரென லாமே. ௬

அலைபுனற் கங்கை தங்கிய சடையா ரடல்நெடு மதிலொரு மூன்றுங், கொலையிடைச் செந்தீ வெந்தறக் கண்ட குழகனார் கோயில தென்பர், மலையின்மிக் குயர்ந்த மரக்கலஞ் சரக்கு மற்றுமற் றிடையிடை யெங்குங், கலைகளித் தேறிக் கானலில் வாழுங் கழுமல நகரென லாமே. ௭

ஒருக்கமுன் னினையாத் தக்கன்றன் வேள்வி யுடைதர வுழறிய படையார், அரக்கனை வரையா லாற்றலன் றழித்த அழகனா ரமர்ந்துறை கோயில், பரக்கும்வண் புகழார் பழியவை பார்த்துப் பலபல அறங்களே பயிற்றிக், கரக்குமா றறியா வண்மையால் வாழுங் கழுமல நகரென லாமே. ௮

அருவரை பொறுத்த ஆற்றலி னானு மணிகிளர் தாமரை யானும், இருவரு மேத்த எரியுரு வான இறைவனு றுறை விடம் வினவில், ஒருவரிவ் வுலகில் வாழ்கிலா வண்ண மொலி புனல் வெள்ளமுன் பரப்பக், கருவரை சூழ்ந்த கடலிடை மிதக்குங் கழுமல நகரென லாமே. ௯

உரிந்துய ருருவி லுடைதவிர்ந் தாரு மத்துகில் போர்த் துழல் வாருந், தெரிந்துபுன் மொழிகள் செப்பின கேளாச் செம்மையார் நன்மையா லுறைவாங், குருந்துயர் கோங்கு கொடிவிடு முல்லை மல்லிகை சண்பகம் வேங்கை, கருந்தடங் கண்ணின் மங்கைமார் கொய்யுங் கழுமல நகரென லாமே. ௧0

கானலங் கழனி யோதம்வந் துலவுங் கழுமல நகருறை வார்மேல், ஞானசம் பந்தன் நற்றமிழ் மாலை நன்மையா லுரை செய்து நவில்வார், ஊனசம் பந்தத் துறுபிணி நீங்கி யுள்ளமு மொருவழிக் கொண்டு, வானிடை வாழ்வர் மண்மிசைப் பிறவார் மற்றிதற் காணையு நமதே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## 119. திருவீழிமிழலை : பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

புள்ளித்தோ லாடை பூண்பது நாகம் பூசுசாந் தம் பொடி நீறு, கொள்ளித்தீ விளக்குக் கூளிகள் கூட்டங் காளி யைக் குணஞ்செய்கூத் துடையோன், அள்ளற்கா ராமை யகடுவான் மதிய மேய்க்கமுட் டாழைக ளானை, வெள்ளைக் கொம் பீனும் விரிபொழில் வீழி மிழலையா னெனவினை கெடுமே. ௧

இசைந்தவா றடியா ரிடுதுவல் வானோ ரிழுகுசந் தனத் திளங் கமலப், பசும்பொன்வா சிகைமேற் பரப்புவாய் கரப் பாய் பத்திசெய் யாதவர் பக்கல், அசும்புபாய் கழனி யலர் கயன் முதலோ டடுத்தரிந் தெடுத்தவான் சும்மை, விசும்பு தூர்ப் பனபோல் விம்மிய வீழி மிழலையா னெனவினை கெடுமே. ௨

நிருத்த னாறங்கன் நீற்றன்நான் மறையன் நீலமார் மிடற்றன்நெற் றிக்கண், ஒருத்தன்மற் றெல்லா வுயிர்கட்கு முயிரா யுளனிலன் கேடிலி யுமைகோன், திருத்தமாய் நாளு மாடுநீர்ப் பொய்கை சிறியவ ரறிவினின் மிக்க, விருத்தரை யடிவீழ்ந் திடம்புகும் வீழி மிழலையா னெனவினை கெடுமே.

தாங்கருங் காலந் தவிரவந் திருவர் தம்மொடுங் கூடியா ரங்கம், பாங்கினாற் றரித்துப் பண்டுபோ லெல்லாம் பண்ணிய கண்ணுதற் பரமர், தேங்கொள்பூங் கமுகு தெங்கிளங் கொடிமாச் செண்பகம் வண்பலா இலுப்பை, வேங்கைபூ மகிழால் வெயிற்புகா வீழி மிழலையா னெனவினை கெடுமே. ௪

கூசுமா மயானங் கோயில்வா யிற்கட் குடவயிற் றனசில பூதம், பூசுமா சாந்தம் பூதிமெல் லோதி பாதிநற் பொங்கர வரையோன், வாசமாம் புன்னை மௌவல்செங் கழுநீர் மலரணைந் தெழுந்தவான் தென்றல், வீசுமாம் பொழிற்றேன் துவலைசேர் வீழி மிழலையா னெனவினை கெடுமே. ௫

பாதியோர் மாதர் மாலுமோர் பாகர் பங்கயத் தயனுமோர் பாலர், ஆதியாய் நடுவா யந்தமாய் நின்ற அடிகளா ரமரர்கட் கமரர், போதுசேர் சென்னிப் புரூரவாப் பணிசெய் பூசுரர் பூமக னனைய, வேதியர் வேதத் தொலியறா வீழி மிழலையா னெனவினை கெடுமே. ௬

தன்றவம் பெரிய சலந்தர னுடலந் தடிந்தசக் கரமெனக் கருளென், றன்றரி வழிபட் டிழிச்சிய விமானத் திறையவன் பிறையணி சடையன், நின்றநாள் காலை யிருந்தநாள் மாலை கிடந்தமண் மேல்வரு கலியை, வென்றவே தியர்கள் விழாவறா வீழி மிழலையா னெனவினை கெடுமே. ௭

கடுத்தவா ளரக்கன் கைலையன் றெடுத்த காமுரஞ் சிரநெரிந் தலற, அடர்த்ததோர் விரலா லஞ்செழுத் துரைக்க அருளினன் தடமிகு நெடுவாள், படித்தநான் மறைகேட் டிருந்தபைங் கிளிகள் பதங்களை யோதப்பா டிருந்த, விடைக்குலம் பயிற்றும் விரிபொழில் வீழி மிழலையா னெனவினை கெடுமே. ௮

அளவிட லுற்ற அயனொடு மாலு மண்டமண் கெண்டியுங் காணு, முளையெரி யாய மூர்த்தியைத் தீர்த்த முக்கணெம் முதல்வனை முத்தைத், தளையவிழ் கமலத் தவிசின்மே லன்னந் தன்னிளம் பெடையொடும் புல்கி, விளைகதிர்க் கவரி வீசவீற் றிருக்கு மிழலையா னெனவினை கெடுமே. க

கஞ்சிப்போ தடையார் கையிற்கோ சாரக் கலதிகள் கட்டுரை விட்டு, அஞ்சித்தே விரிய எழுந்தநஞ் சதனை யுண்டம ரர்க்கமு தருளி, இஞ்சிக்கே கதலிக் கனிவிழக் கமுகின் குலையொடும் பழம்விழத் தெங்கின், மிஞ்சுக்கே மஞ்சு சேர்பொழில் வீழி மிழலையா னெனவினை கெடுமே. க0

வேந்தர்வந் திறைஞ்ச வேதியர் வீழி மிழலையுள் விண்ணிழி விமானத், தேய்ந்ததன் தேவி யொடுறை கின்ற ஈசனை யெம்பெரு மானைத், தோய்ந்தநீர்த் தோணி புரத்துறை மறையோன் தூமொழி ஞானசம் பந்தன், வாய்ந்தபா மாலை வாய்நவில் வாரை வானவர் வழிபடு வாரே. கக

திருச்சிற்றம்பலம்

---

## 120. திருஆலவாய் : பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை வரிவளைக் கைம்மட மானி, பங்கயச் செல்வி பாண்டிமா தேவி பணிசெய்து நாள்தோறும் பரவப், பொங்கழ லுருவன் பூதநா யகனால் வேதமும் பொருள்களு மருளி, அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த ஆலவா யாவது மிதுவே. க

வெற்றவே யடியா ரடிமிசை வீழும் விருப்பினன் வெள்ளைநீ றணியும், கொற்றவன் றனக்கு மந்திரி யாய குலச்சிறை குலாவிநின் றேத்தும், ஒற்றைவெள் விடைய னும்பரார் தலைவ னுலகினி லியற்கையை யொழிந்திட், டற்றவர்க் கற்ற சிவனுறை கின்ற ஆலவா யாவது மிதுவே. உ

செந்துவர் வாயாள் சேலன கண்ணாள் சிவன்திரு நீற்றினை வளர்க்கும், பந்தணை விரலாள் பாண்டிமா தேவி பணிசெயப் பாரிடை நிலவும், சந்தமார் தரளம் பாம்புநீர் மத்தந் தண்ணெருக் கம்மலர் வன்னி, அந்திவான் மதிசேர் சடைமுடி யண்ணல் ஆலவா யாவது மிதுவே. ௩

கணங்களாய் வரினுந் தமியராய் வரினு மடியவர் தங்களைக் கண்டால், குணங்கொடு பணியுங் குலச்சிறை குலாவுங் கோபுரஞ் சூழ்மணிக் கோயில், மணங்கமழ் கொன்றை வாளரா மதியம் வன்னிவண் கூவிள மாலை, அணங்குவீற் றிருந்த சடைமுடி யண்ணல் ஆலவா யாவது மிதுவே. ௪

செய்யதா மரைமே லன்னமே யனைய சேயிழை திருநுதற் செல்வி, பையர வல்குற் பாண்டிமா தேவி நாள்தொறும் பணிந்தினி தேத்த, வெய்யவேற் சூலம் பாசமங் குசமான் விரிகதிர் மழுவுடன் தரித்த, ஐயனு ருமையோ டின்புறு கின்ற ஆலவா யாவது மிதுவே. ௫

நலமில ராக நலமதுண் டாக நாடவர் நாடறி கின்ற, குலமில ராகக் குலமதுண் டாகத் தவம்பணி குலச்சிறை பரவும், கலைமலி கரத்தன் மூவிலை வேலன் கரியுரி மூடிய கண்டன், அலைமலி புனல்சேர் சடைமுடி யண்ணல் ஆலவா யாவது மிதுவே. ௬

முத்தின்தாழ் வடமுஞ் சந்தனக் குழம்பும் நீறுந்தன் மார்பினின் முயங்கப், பத்தியார் கின்ற பாண்டிமா தேவி பாங்கொடு பணிசெய நின்ற, சுத்தமார் பளிங்கின் பெருமலை யுடனே சுடர்மர கதமடுத் தாற்போல், அத்தனு ருமையோ டின்புறு கின்ற ஆலவா யாவது மிதுவே. ௭

நாவணங் கியல்பா மஞ்செழுத் தோதி நல்லராய் நல்லியல் பாகும், கோவணம் பூதி சாதனங் கண்டாற் றொழுதெழு குலச்சிறை போற்ற, ஏவணங் கியல்பா மிராவணன் திண்டோ ளிருபதும் நெரிதர வூன்றி, ஆவணங் கொண்ட சடைமுடி யண்ணல் ஆலவா யாவது மிதுவே. ௮

மண்ணெலா நிகழ மன்னனாய் மன்னு மணிமுடிச் சோழன்றன் மகளாம், பண்ணினேர் மொழியாள் பாண்டிமா தேவி பாங்கினாற் பணிசெய்து பரவ, விண்ணுளா ரிருவர் கீழொடு மேலு மளப்பரி தாம்வகை நின்ற, அண்ணலா ருமையோ டின்புறு கின்ற ஆலவா யாவது மிதுவே. ௯

தொண்டரா யுள்ளார் திசைதிசை தோறுந் தொழுது தன் குணத்தினைக் குலாவக், கண்டநாள் தோறு மின்புறு கின்ற குலச்சிறை கருதிநின் றேத்தக், குண்டரா யுள்ளார் சாக்கியர் தங்கள் குறியின்கண் நெறியிடை வாரா, அண்டநா யகன்றா னமர்ந்துவீற் றிருந்த ஆலவா யாவது மிதுவே. ௧௦

பன்னலம் புணரும் பாண்டிமா தேவி குலச்சிறை யெனுமிவர் பணியும், அந்நலம் பெறுசீ ராலவா யீசன் திருவடி யாங்கவை போற்றிக், கன்னலம் பெரிய காழியுள் ஞான சம்பந்தன் செந்தமி ழிவைகொண், டின்னலம் பாட வல்லவ ரிமையோ ரேத்தவீற் றிருப்பவ ரினிதே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## 121. திருப்பந்தணை நல்லூர் : பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

இடறினார் கூற்றைப் பொடிசெய்தார் மதிலை யிவை சொல்லி யுலகெழுந் தேத்தக், கடறினா ராவர் காற்றுளா ராவர் காதலித் துறைதரு கோயில், கொடிறனா ர்யாதுங் குறைவிலார் தாம்போய்க் கோவணங் கொண்டுகூத் தாடும், படிறனார் போலும் பந்தணை நல்லூர் நின்றவெம் பசுபதி யாரே. ௧

கழியுளா ரெனவுங் கடலுளா ரெனவுங் காட்டுளார் நாட்டுளா ரெனவும், வழியுளா ரெனவும் மலையுளா ரெனவும் மண்ணுளார் விண்ணுளா ரெனவுஞ், சுழியுளா ரெனவுஞ் சுவடுதா மறியார் தொண்டர்வாய் வந்தன சொல்லும், பழியுளார் போலும் பந்தணை நல்லூர் நின்றவெம் பசுபதி யாரே. ௨

காட்டினா ரெனவும் நாட்டினா ரெனவுங் கடுந்தொழிற் காலனைக் காலால், வீட்டினா ரெனவுஞ் சாந்த வெண்ணீறு பூசியோர் வெண்மதி சடைமேல், சூட்டினா ரெனவுஞ் சுவடுதா மறியார் சொல்லுள சொல்லுநால் வேதப், பாட்டினார் போலும் பந்தணை நல்லூர் நின்றஎம் பசுபதி யாரே. ௫

முருகினார் பொழில்சூழ் உலகினா ரேத்த மொய்த்தபல் கணங்களின் துயர்கண், டுருகினா ராகி யுறுதிபோந் துள்ள மொண்மையா லொளிதிகழ் மேனி, கருகினா ரெல்லாங் கைதொழு தேத்தக் கடலுள்நஞ் சமுதமா வாங்கிப், பருகினார் போலும் பந்தணை நல்லூர் நின்றஎம் பசுபதி யாரே. ௬

பொன்னினார் கொன்றை யிருவடங் கிடந்து பொறிகிளர் பூணநூல் புரள, மின்னினா ருருவின் மிளிர்வதோ ரரவ மேவுவெண் ணீறுமெய் பூசித், துன்னினார் நால்வர்க் கறமமர்ந் தருளித் தொன்மையார் தோற்றமுங் கேடும், பன்னினார் போலும் பந்தணை நல்லூர் நின்றஎம் பசுபதி யாரே. ௭

ஒண்பொனா ரனைய அண்ணல்வாழ் கெனவு முமையவள் கணவன்வாழ் கெனவும், அண்பினார் பிரியா ரல்லுநன் பகலு மடியவ ரடியிணை தொழுவே, நண்பினா ரெல்லாம் நல்லரென் றேத்த வல்லவர் தீயரென் றேத்தும், பண்பினார் போலும் பந்தணை நல்லூர் நின்றஎம் பசுபதி யாரே. ௮

எற்றினா ரேது மிடைகொள்வா ரில்லை யிருநிலம் வானுல கெல்லை, தெற்றினார் தங்கள் காரண மாகச் செருமலைந் தடியிணை சேர்வான், முற்றினார் வாழு மும்மதில் வேவ மூவிலைச் சூலமும் மழுவும், பற்றினார் போலும் பந்தணை நல்லூர் நின்றஎம் பசுபதி யாரே. ௯

ஒலிசெய்த குழலின் முழவம தியம்ப வோசையா லாடலறாத, கலிசெய்த பூதங் கையினா லிடவே காலினாற் பாய்தலு மரக்கன், வலிகொள்வர் புலியி னுரிகொள்வ ரேனை வாழ்வுநன் றானுமோர் தலையில், பலிகொள்வர் போலும் பந்தணை நல்லூர் நின்றஎம் பசுபதி யாரே. ௧௦

சேற்றினுர் பொய்கைத் தாமரை யானுஞ் செங்கண்மா லிவரிரு கூறுத், தோற்றினுர் தோற்றத் தொன்மையை யறி யார் துணைமையும் பெருமையுந் தம்மில், சாற்றினுர் சாற்றி யாற்றலோ மென்னச் சரண்கொடுத் தவர்செய்த பாவம், பாற்றினுர் போலும் பந்தணை நல்லூர் நின்றஎம் பசுபதி யாரே. ௯, ௧0

கல்லிசை பூணக் கலையொலி யோவாக் கழுமல முதுபதி தன்னில், நல்லிசை யாளன் புல்லிசை கேளா நற்றமிழ் ஞான சம் பந்தன், பல்லிசை பகுவாய்ப் படுதலை யேந்தி மேவிய பந்தணை நல்லூர், சொல்லிய பாடல் பத்தும்வல் லவர்மேல் தொல்வினை சூழகி லாவே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## 122. திருவோமாம்புலியூர் : பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

பூங்கொடி மடவா ளுமையொரு பாகம் புரிதரு சடை முடி யடிகள், வீங்கிருள் நட்ட மாடுமெம் விகிர்தர் விருப் பொடு முறைவிடம் வினவில், தேங்கமழ் பொழிலிற் செழு மலர் கோதிச் செறிதரு வண்டிசை பாடும், ஓங்கிய புகழா ரோமமாம் புலியூ ருடையவர் வடதளி யதுவே. ௧

சம்பரற் கருளிச் சலந்தரன் வீயத் தழலுமிழ் சக்கரம் படைத்த, எம்பெரு மானு ரிமையவ ரேத்த இனிதினங் குறைவிடம் வினவில், அம்பர மாகி யழலுமிழ் புகையி னாகுதி யால்மழை பொழியும், உம்பர்க ளேத்து மோமமாம் புலியூ ருடையவர் வடதளி யதுவே. ௨

பாங்குடைத் தவத்துப் பகீரதற் கருளிப் படர்சடைக் கரந்தநீர்க் கங்கை, தாங்குதல் தவிர்த்துத் தராதலத் திழித்த தத்துவ னுறைவிடம் வினவில், ஆங்கெரி மூன்று மமர்ந்துட னிருந்த அங்கையா லாகுதி வேட்கும், ஓங்கிய மறையோ ரோமமாம் புலியூ ருடையவர் வடதளி யதுவே. ௩

புற்றர வணிந்து நீறுமெய் பூசிப் பூதங்கள் சூழ்தர ஊரூர், பெற்றமொன் றேறிப் பெய்பலி கொள்ளும் பிரானவ னுறைவிட மினவில், கற்றநால் வேத மங்கமோ ராறுங் கருத்தினா ரருத்தியாற் றெரியும், உற்றபல் புகழா ரோமமாம் புலியூ ருடையவர் வடதளி யதுவே. ௪

நிலத்தவர் வான மாள்பவர் கீழோர் துயர்கெட நெடிய மாற் கருளால், அலைத்தவல் லசுர ராசற ஆழி யளித்தவ னுறைவிட மினவில், சலத்தினாற் பொருள்கள் வேண்டுதல் செய்யாத் தன்மையார் நன்மையால் மிக்க, உலப்பில்பல் புகழா ரோமமாம் புலியூ ருடையவர் வடதளி யதுவே. ௫

மணந்திகழ் திசைக ளெட்டுமே ழிசையு மலியுமா றங் கமைவேள்வி, இணைந்தநால் வேத மூன்றெரி யிரண்டு பிறப்பென வொருமையா லுணரும், குணங்களு மவற்றின் கொள்பொருள் குற்ற மற்றவை யுற்றது மெல்லாம், உணர்ந்த வர் வாழு மோமமாம் புலியூ ருடையவர் வடதளி யதுவே.

தலையொரு பத்துந் தடக்கைய திரட்டி தானுடை யரக்கனொண் கயிலை, அலைவது செய்த வவன்திறல் கெடுத்த ஆதியா ருறைவிட மினவில், மலையென வோங்கும் மாளிகை நிலவு மாமதில் மாற்றல ரென்றும், உலவுபல் புகழா ரோம மாம் புலியூ ருடையவர் வடதளி யதுவே. ௮

கள்ளவிழ் மலர்மே லிருந்தவன் கரியோ னென்றிவர் காண்பரி தாய, ஒள்ளெரி யுருவ ருமையவ ளோடு முகந் தினி துறைவிட மினவில், பள்ளநீர் வாளை பாய்தரு கழ னிப் பனிமலர்ச் சோலைசூ ழாலை, ஒள்ளிய புகழா ரோமமாம் புலியூ ருடையவர் வடதளி யதுவே. ௯

தெள்ளிய ரல்லாத் தேரரோ டமணர் தடுக்கொடு சீவர முடுக்கும், கள்ளமார் மனத்துக் கலதிகட் கருளாக் கடவுளா ருறைவிட மினவில், நள்ளிருள் யாமம் நான்மறை தெரிந்து நலந்திகழ் மூன்றெரி யோம்பும், ஒள்ளியார் வாழு மோம மாம் புலியூ ருடையவர் வடதளி யதுவே. ௧௦

விளைதரு வயலுள் வெயில்செறி பவள மேதிகண் மேய்புலத் திடறி, ஒளிதர மல்கு மோமமாம் புலியூ ருடையவர் வடதளி யரனைக், களிதரு நிவப்பிற் காண்டகு செல்வக் காழியுள் ஞானசம் பந்தன், அளிதரு பாடல் பத்தும்வல் லார்க ளமரலோ கத்திருப் பாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## 123. திருக்கோணமலை : பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

நிரைகழ லரவஞ் சிலம்பொலி யலம்பு நிமலர்நீ றணிதிரு மேனி, வரைகெழு மகளோர் பாகமாப் புணர்ந்த வடிவினர் கொடியணி விடையர், கரைகெழு சந்துங் காரகிற் பிளவு மளப்பருங் கனமணி வரன்றிக், குரைகட லோதநித் திலங் கொழிக்குங் கோணமா மலையமர்ந் தாரே. ௧

கடிதென வந்த கரிதனை யுரித்து அவ்வுரி மேனிமேற் போர்ப்பர், பிடியன நடையாள் பெய்வளை மடந்தை பிறைநுத லவளொடு முடனாய்க், கொடிதெனக் கதறுங் குரைகடல் சூழ்ந்து கொள்ளமு னித்திலஞ் சுமந்து, குடிதனை நெருங்கிப் பெருக்கமாய்த் தோன்றுங் கோணமா மலையமர்ந் தாரே.

பனித்திளந் திங்கட் பைந்தலை நாகம் படர்சடை முடியிடை வைத்தார், கனித்திளந் துவர்வாய்க் காரிகை பாகமாகமுன் கலந்தவர் மதில்மேல், தனித்தபே ருருவ விழித்தழல் நாகந் தாங்கிய மேருவெஞ் சிலையாக், குனித்ததோர் வில்லார் குரைகடல் சூழ்ந்த கோணமா மலையமர்ந் தாரே. ௩

பழித்திளங் கங்கை சடையிடை வைத்துப் பாங்குடை மதனனைப் பொடியா, விழித்தவன் தேவி வேண்டமுன் கொடுத்த விமலனார் கமலமார் பாதர், தெழித்துமுன் னரற்றுஞ் செழுங்கடற் றரளஞ் செம்பொனு மிப்பியுஞ் சுமந்து, கொழித்துவன் றிரைகள் கரையிடைச் சேர்க்குங் கோணமா மலையமர்ந் தாரே.

தாயினு நல்ல தலைவரென் றடியார் தம்மடி போற்றிசைப் பார்கள், வாயினு மனத்து மருவிநின் றகலா மாண்பினர் காண்பல வேடர், நோயிலும் பிணியுந் தொழிலர்பால் நீக்கி நுழைதரு நூலினர் ஞாலம், கோயிலுஞ் சுனையுங் கடலுடன் சூழ்ந்த கோணமா மலையமர்ந் தாரே. ரு

பரிந்துநன் மனத்தால் வழிபடு மாணி தன்னுயிர் மேல்வருங் கூற்றைத், திரிந்திடா வண்ண முதைத்தவற் கருளுஞ் செம்மையார் நம்மையா ளுடையார், விரிந்துயர் மௌவல் மாதவி புன்னை வேங்கைவண் செருந்திசெண் பகத்தின், குருந்தொடு முல்லை கொடிவிடும் பொழில்சூழ் கோணமா மலையமர்ந் தாரே. சு, எ

எடுத்தவன் தருக்கை யிழித்தவர் விரலா லேத்திட வாத்தமாம் பேறு, தொடுத்தவர் செல்வந் தோன்றிய பிறப்பு மிறப்பறி யாதவர் வேள்வி, தடுத்தவர் வனப்பால் வைத்ததோர் கருணை தன்னருட் பெருமையும் வாழ்வும், கொடுத்தவர் விரும்பும் பெரும்புக ழாளர் கோணமா மலையமர்ந் தாரே. அ

அருவரா தொருகை வெண்டலை யேந்தி யகந்தொறும் பலியுடன் புக்க, பெருவரா யுறையு நீர்மையர் சீர்மைப் பெருங்கடல் வண்ணனும் பிரமன், இருவரு மறியா வண்ண மொள் ளெரியா யுயர்ந்தவர் பெயர்ந்தநன் மாற்கும், குருவராய் நின்றார் குரைகழல் வணங்கக் கோணமா மலையமர்ந் தாரே. கூ

நின்றுணுஞ் சமணு மிருந்துணுந் தேரு நெறியலா தனபுறங் கூற, வென்றுநஞ் சுண்ணும் பரிசின ரொருபால் மெல்லிய லொடுமுட னாகித், துன்றுமொண் பௌவ மவ்வலுஞ் சூழ்ந்து தாழ்ந்துறு திரைபல மோதிக், குன்றுமொண் கானல் வாசம்வந் துலவுங் கோணமா மலையமர்ந் தாரே. கO

குற்றமி லாதார் குரைகடல் சூழ்ந்த கோணமா மலையமர்ந் தாரைக், கற்றுணர் கேள்விக் காழியர் பெருமான் கருத்துடை ஞானசம் பந்தன், உற்றசெந் தமிழார் மாலையீ ரைந்து முரைப்பவர் கேட்பவ ருயர்ந்தோர், சுற்றமு மாகித் தொல்வினை யடையார் தோன்றுவர் வானிடைப் பொலிந்தே.

திருச்சிற்றம்பலம்

---

## 124. திருக்குருகாவூர்வெள்ளடை : பண் - அந்தாளிக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

சுண்ணவெண் ணீறணி மார்பிற் றோல்புனைந்
தெண்ணரும் பல்கண மேத்தநின் றாடுவீர்
விண்ணமர் பைம்பொழில் வெள்ளடை மேவிய
பெண்ணமர் மேனியெம் பிஞ்ஞக ரேரே. க

திரைபுல்கு கங்கை திகழ்சடை வைத்து
வரைமக ளோடுட னாடுதிர் மல்கு
விரைகமழ் தண்பொழில் வெள்ளடை மேவிய
அரைமல்கு வாளர வாட்டுகந் தீரே. உ

அடையலர் தொன்னகர் மூன்றெரித் தன்ன
நடைமட மங்கையோர் பாக நயந்து
விடையுகந் தேறுதிர் வெள்ளடை மேவிய
சடையமர் வெண்பிறைச் சங்கரன் நீரே. ௩

வளங்கிளர் கங்கை மடவர லோடு
களம்பட ஆடுதிர் காடரங் காக
விளங்கிய தண்பொழில் வெள்ளடை மேவிய
இளம்பிறை சேர்சடை யெம்பெரு மானே. ச

சுரிகுழல் நல்ல துடியிடை யோடு
பொரிபுல்கு காட்டிடை யாடுதிர் பொங்க
விரிதரு பைம்பொழில் வெள்ளடை மேவிய
எரிமழு வாட்படை யெந்தை பிரானே. ரு

காவியங் கண்மட வாளொடுங் காட்டிடைத்
தீயக லேந்திநின் றாடுதிர் தேன்மலர்
மேவிய தண்பொழில் வெள்ளடை மேவிய
ஆவினி லைந்துகொண் டாட்டுகந் தீரே. கூ, கக

திருச்சிற்றம்பலம்

---

## 125. திருநல்லூர்ப்பெருமணம் : பண் - அந்தாளிக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணஞ் சூடல ரேதொண்டர்
நல்லூர்ப் பெருமண மேயநம் பானே. க

தருமண லோதஞ்சேர் தண்கடல் நித்திலம்
பருமண லாக்கொண்டு பாவைநல் லார்கள்
வருமணங் கூட்டி மணஞ்செயு நல்லூர்ப்
பெருமணத் தான்பெண்ணோர் பாகங்கொண் டானே. உ

அன்புறு சிந்தைய ராகி யடியவர்
நன்புறு நல்லூர்ப் பெருமண மேவிநின்
றின்புறு மெந்தை யிணையடி யேத்துவார்
துன்புறு வாரல்லர் தொண்டுசெய் வாரே. ங

வல்லியந் தோலுடை யார்ப்பது போர்ப்பது
கொல்லியல் வேழத் துரிவிரி கோவணம்
நல்லிய லார்தொழு நல்லூர்ப் பெருமணம்
புல்கிய வாழ்க்கையெம் புண்ணிய னார்க்கே. ச

ஏறுகந் தீரிடு காட்டெரி யாடிவெண்
நீறுகந் தீர்நிரை யார்விரி தேன்கொன்றை
நாறுகந் தீர்திரு நல்லூர்ப் பெருமணம்
வேறுகந் தீருமை கூறுகந் தீரே. ரு

சிட்டப்பட் டார்க்கெளி யான்செங்கண் வேட்டுவப்
பட்டங்கட் டுஞ்சென்னி யான்பதி யாவது

நட்டக்கொட் டாட்டரு நல்லூர்ப் பெருமணத்
திட்டப்பட் டாலொத்தி ராலெம் பிரானிரே. ௬

மேகத்த கண்டனெண் டோளன்வெண் ணீற்றுமை
பாகத்தன் பாய்புலித் தோலொடு பந்தித்த
நாகத்தன் நல்லூர்ப் பெருமணத் தான்நல்ல
போகத்தன் யோகத்தை யேபுரிந் தானே. ௭

தக்கிருந் தீரன்று தாளா லரக்கனை
உக்கிருந் தொல்க வுயர்வரைக் கீழிட்டு
நக்கிருந் தீரின்று நல்லூர்ப் பெருமணம்
புக்கிருந் தீரெமைப் போக்கரு ளீரே. ௮

ஏலுந்தண் டாமரை யானு மியல்புடை
மாலுந்தம் மாண்பறி கின்றிலர் மாமறை
நாலுந்தம் பாட்டென்பர் நல்லூர்ப் பெருமணம்
போலுந்தங் கோயில் புரிசடை யார்க்கே. ௯

ஆதர மமணொடு சாக்கியர் தாஞ்சொல்லும்
பேதைமை கேட்டுப் பிணக்குறு வீர்வம்மின்
நாதனை நல்லூர்ப் பெருமண மேவிய
வேதனை தாள்தொழ வீடெளி தாமே. ௧௦

நறும்பொழிற் காழியுள் ஞானசம் பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெருமணத் தானை
உறும்பொரு ளாற்சொன்ன வொண்டமிழ் வல்லார்க்
கறும்பழி பாவ மவல மிலரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

மூன்றாந் திருமுறை

ஆக திருப்பதிகங்கள் ௩௮௩

| | | | | |
|---|---|---|---|---|
| முதல் திருமுறை—பதிகம் | | ௧௩௬—பாடல்கள் | | ௧௪௬௯ |
| இரண்டாந் | ,, ,, | ௧௨௨ | ,, | ௧௩௩௧ |
| மூன்றாந் | ,, ,, | ௧௨௫ | ,, | ௧௩௪௭ |
| | ஆக | ௩௮௩ | | ௪௧௪௭ |

# திருவிடைவாய்*

திருச்சிற்றம்பலம்

மறியார் கரத்தெந் தையம்மா துமையோடும்
பிறியா தபெம்மா னுறையு மிடமென்பர்
பொறிவாய் வரிவண் டுதன்பூம் பெடைபுல்கி
வெறியார் மலரில் துயிலும் விடைவாயே. க

ஒவ்வாத என்பே யிழையா வொளிமௌவிச்
செவ்வான் மதிவைத் தவர்சேர் விடமென்பர்
எவ்வா யிலுமே டலர்கோ டலம்போது
வெவ்வா யரவம் மலரும் விடைவாயே. உ

கரையார் கடல்நஞ் சமுதுண் டவர்கங்கைத்
திரையார் சடைத்தீ வண்ணர்சே ரிடமென்பர்
குரையார் மணியுங் குளிர்சந் தமுங்கொண்டு
விரையார் புனல்வந் திழியும் விடைவாயே. ங

கூசத் தழல்போல் விழியா வருகூற்றைப்
பாசத் தொடும்வீ ழவுதைத் தவர்பற்றும்
வாசக் கதிர்ச்சா லிவெண்சா மரையேபோல்
வீசக் களியன் னமல்கும் விடைவாயே. ச

திரியும் புரமூன் றையுஞ்செந் தழலுண்ண
வெரியம் பெய்தகுன் றவில்லி யிடமென்பர்
கிரியுந் தருமாளி கைச்சூ ளிகைதன்மேல்
விரியுங் கொடிவான் விளிசெய் விடைவாயே. ரு

கிள்ளை மொழியா ளையிகழ்ந் தவன்முத்தீத்
தள்ளித் தலைதக் கனைக்கொண் டவர்சார்வாம்
வள்ளி மருங்குல் நெருங்கும் முலைச்செவ்வாய்
வெள்ளை நகையார் நடஞ்செய் விடைவாயே. சு

பாதத் தொலிபா ரிடம்பா டநடஞ்செய்
நாதத் தொலியர் நவிலு மிடமென்பர்

---

*இப்பதிகம் கல்வெட்டினின்றும் எடுக்கப்பட்டது.

கீதத் தொலியுங் கெழுமும் முழவோடு
வேதத் தொலியும் பயிலும் விடைவாயே. எ

எண்ணு தஅரக் கனுரத் தைநெரித்துப்
பண்ணார் தருபா டலுகந் தவர்பற்றாங்
கண்ணார் விழவிற் கடிவீ திகள்தோறும்
விண்ணோர் களுநம்வந் திறைஞ்சும் விடைவாயே. அ

புள்வாய் பிளந்தா னயன்பூ முடிபாதம்
ஒள்வான் நிலந்தே டுமொரு வர்க்கிடமாந்
தெள்வார் புனற்செங் கழுநீர் முகைதன்னில்
விள்வாய் நறவுண் டுவண்டார் விடைவாயே. கூ

உடையே துமிலார் துவராடை யுடுப்போர்
கிடையா நெறியான் கெழுமு மிடமென்பர்
அடையார் புரம்வே வமூவர்க் கருள்செய்த
விடையார் கொடியா னழகார் விடைவாயே. கo

ஆறும் மதியும் பொதிவே ணியனூரா
மாறில் பெருஞ்செல் வம்மலி விடைவாயை
நாறும் பொழிற்கா ழியர்ஞான சம்பந்தன்
கூறுந் தமிழ்வல் லவர்குற் றமற்றோரே. கக

திருச்சிற்றம்பலம்

# சிவஸ்தல சிவநாம சத்திநாம அட்டவணை

ஈ - ஈழநாடு, கோ - கொங்குநாடு, சோ - சோழநாடு, து - துளுவநாடு, தொ - தொண்டைநாடு,
ந - நடுநாடு, பா - பாண்டிநாடு, ம - மலைநாடு, வ - வடநாடு.

*மூவர் பாடிய தலம். †சம்பந்தரும் அப்பரும் பாடிய தலம். ‡சம்பந்தரும் சுந்தரும் பாடிய தலம். ஏனைய சம்பந்தர் பாடல்கள் மட்டும் உள்ளவை. ஒவ்வொரு தலப்பெயர் முன்னும் 'திரு' என்று கூட்டி வாசிக்கவும். சீகாழி என்ற 107-வது எண்ணுள்ள தலத்துக்குச் சம்பந்தர் தேவாரத்தில் கழுமலம், கொச்சைவயம், சண்பைநகர், சிரபுரம், சீகாழி, தோணிபுரம், பிரமபுரம், புகலி, புறவம், பூந்தராய், வெங்குரு, வேணுபுரம் என்ற 12 பெயர்கள் வழங்கப்படுகின்றன. மூவரும் பாடிய தலங்கள் 44, சம்பந்தரும் அப்பரும் பாடிய தலங்கள் 52, சம்பந்தரும் சுந்தரும் பாடிய தலங்கள் 13, சம்பந்தர் தேவாரம் மட்டுமுள்ள தலங்கள் திருவிடைவாய் உட்பட 111. ஆ சம்பந்தர் தேவாரமுள்ள தலங்கள் 44+52+13+111=220.

| எண் | தலத்தின் பெயர் | நாடு | சுவாமி பெயர் | தேவியார் பெயர் |
|---|---|---|---|---|
| 1 | அகத்தியான் பள்ளி | சோ | அகத்தீசுவரர் | பாகம் பிரியாநாயகி |
| 2 | அச்சிறு பாக்கம் | தொ | பாக்கபுரேசுவரர் | சுந்தர நாயகி |
| 3 | அண்ணமலை† | ந | அருணசலேசுவரர் | உண்ணமுலையம்மை |
| 4 | அதிகை* [ல் | ,, | வீரட்டேசுவரர் | திரிபுர சுந்தரி |
| 5 | அம்பர்ப்பெருந்திருக்கோயி | சோ | பிரமபுரீசுவரர் | பூங்குழலம்மை |
| 6 | அம்பர்மாகாளம் | ,, | மாகாளநாதர் | பயக்ஷய நாயகி |
| 7 | அரசிலி | தொ | அரசிலிநாதர் | பெரிய நாயகி |

| எண் | தலத்தின் பெயர் | நாடு | சுவாமி பெயர் | தேவியார் பெயர் |
|---|---|---|---|---|
| 8 | அரதைப்பெரும்பாழி | சோ | பாதாளேசுவரர் | அலங்கார நாயகி |
| 9 | அரசிற்கரைப்புத்தூர்* | ,, | படிக்காசளித்தஈசுவரர் | அழகாம்பிகை |
| 10 | அவளிவணல்லூர்† | ,, | சாக்ஷிநாதேசுவரர் | சௌந்தர நாயகி |
| 11 | அழுந்தூர் | ,, | வேதபுரீசுவரர் | சௌந்தராம் பிகை |
| 12 | அறையணிநல்லூர் | ந | அறையணிநாதேசுவரர் | அருள் நாயகி |
| 13 | அனேகதங்காபதம் | வ | அருண்மன்னேசுவரர் | மனோன்மணியம்மை |
| 14 | அன்பிலாலந்துறை† | சோ | ஆலந்துறைநாதர் | சௌந்தர நாயகி |
| 15 | அன்னியூர்† | ,, | ஆபத்சகாயேசுவரர் | பெரிய நாயகி |
| 16 | ஆக்கூர்† | ,, | தான்தோன்றியப்பர் | வாள்நெடுங் கண்ணி |
| 17 | ஆடானை | பா | ஆதிரத்தினேசுவரர் | சிநேகவல்லி |
| 18 | ஆப்பனூர் | ,, | திருவாப்புடையார் | குரவங்கமழ் குழலி |
| 19 | ஆமாத்தூர்* | ந | அபிராமேசுவரர் | முத்தாம்பிகை |
| 20 | ஆரூர்* | சோ | வன்மீகநாதர் | அல்லியங்கோதை |
| 21 | ஆலங்காடு* | தொ | தேவர்சிங்கப்பெருமான் | வண்டார் குழலி |
| 22 | ஆலவாய்† | பா | சொக்கநாதர் | மீனாக்ஷியம்மை |
| 23 | ஆவடுதுறை* | சோ | மாசிலாமணீசுவரர் | ஒப்பிலாமுலையம்மை |
| 24 | ஆவூர் | ,, | பசுபதீசுவரர் | மங்களநாயகி |
| 25 | ஆனைக்கா* | ,, | ஜம்புகேசுவரர் | அகிலாண்ட நாயகி |
| 26 | இடும்பாவனம் | ,, | சற்குணநாதேசுவரர் | மங்களநாயகி |
| 27 | இடைச்சுரம் | தொ | இடைச்சுரநாதர் | இமயமடக் கொடியம்மை |
| 28 | இடைமருது* | சோ | மகாலிங்கேசுவரர் | பெருநலமாமுலை நாயகி |
| 29 | இந்திரநீலபருப்பதம் | வ | நீலாசலநாதர் | நீலாம்பிகை |

| | | | | |
|---|---|---|---|---|
| 30 | இராமனதீச்சரம் | சோ | இராமநாதேசுவரர் | கருவார்குழலியம்மை |
| 31 | இராமேச்சுரம்† | பா | ,, ,, | மலைவளர் காதலி |
| 32 | இரும்பூளை | சோ | காசிஆரணியேசுவரர் | ஏலவார் குழலியம்மை |
| 33 | இரும்பைமாகாளம் | தொ | மாகாளேசுவரர் | குயில்மொழியம்மை |
| 34 | இலம்பையங்கோட்டூர் | ,, | சந்திரசேகரர் | கோடேந்து முலையம்மை |
| 35 | இன்னம்பர்† | சோ | எழுத்தறிநாதர் | சௌந்தர நாயகி |
| 36 | ஈங்கோய்மலை | சோ | மரகதாசலேசுவரர் | மரகத வல்லி |
| 37 | உசாத்தானம் | ,, | மந்திரபுரீசுவரர் | பெரிய நாயகி |
| 38 | ஊறல் | தொ | உமாபதேசுவரர் | உமையம்மை |
| 39 | எருக்கத்தம்புலியூர் | ந | நீலகண்டேசுவரர் | நீலமலர்க் கண்ணம்மை |
| 40 | ஏடகம் | பா | ஏடகநாதேசுவரர் | ஏலவார் குழலி |
| 41 | ஐயாறு* | சோ | பஞ்சநதேசுவரர் | அறம்வளர்த்த நாயகி |
| 42 | ஒற்றியூர்* | தொ | படம்பக்கநாதர் | வடிவுடையம்மை |
| 43 | ஓத்தூர் | ,, | வேதநாதேசுவரர் | இளமுலை நாயகி |
| 44 | ஓமாம்புலியூர்† | சோ | துயர்தீர்த்தநாதர் | பூங்கொடி நாயகி |
| 45 | கச்சியேகம்பம்* | தொ | ஏகாம்பரநாதர் | காமாக்ஷியம்மை |
| 46. | கச்சிநெறிக்காரைக்காடு | ,, | காரைத்திருநாதேசுவரர் | காமாக்ஷியம்மை |
| 47 | கடம்பூர்† | சோ | அமிர்தகடேசுவரர் | சோதிமின்னம்மை |
| 48 | கடவூர்* | ,, | ,, ,, | அபிராமியம்மை |
| 49 | கடவூர்மயானம்* | ,, | பிரமபுரீசுவரர் | மலர்குழல்மின்னம்மை |
| 50 | கடிக்குளம் | ,, | கற்பகேசுவரர் | சௌந்தர நாயகி |
| 51 | கடைமுடி | ,, | கடைமுடிநாதர் | அபிராமியம்மை |
| 52 | கண்டியூர்† | ,, | பிரமசிரக்கண்டீசுவரர் | மங்கள நாயகி |
| 53 | கண்ணார்கோயில் | ,, | கண்ணாயிரேசுவரர் | முருகுவளர் கோதையம்மை |
| 54 | கயிலாயம்* | வ | கயிலாயநாதர் | பார்வதியம்மை |

| எண் | தலத்தின் பெயர் | நாடு | சுவாமி பெயர் | தேவியார் பெயர் |
|---|---|---|---|---|
| 55 | கரவீரம் | சோ | கரவீரேசுவரர் | பிரத்தியக்ஷமின்னம்மை |
| 56 | கருகாவூர்† | ,, | முல்லைவனேசுவரர் | கரும்பனையாளம்மை |
| 57 | கருக்குடி | ,, | சற்குணலிங்கேசுவரர் | அத்துவிதநாயகி |
| 58 | கருப்பறியலூர்‡ | ,, | குற்றம்பொறுத்தநாதர் | கோல்வளையம்மை |
| 59 | கருவூர் ஆநிலை | கொ | பசுபதீசுவரர் | கிருபாநாயகி |
| 60 | கலிக்காமூர் | சோ | சுந்தரேசுவரர் | அழகுவன முலையம்மை |
| 61 | கழிப்பாலை* | ,, | பால்வண்ணநாதர் | வேத நாயகி |
| 62 | கழுக்குன்றம்* | தொ | வேதகிரீசுவரர் | பெண்ணினல்லாளம்மை |
| 63 | களர் | சோ | களர்முளைநாதேசுவரர் | அழகேசுவரி |
| 64 | கள்ளில் | தொ | சிவாநந்தேசுவரர் | ஆநந்தவல்லியம்மை |
| 65 | கற்குடி* | சோ | கற்பகநாதர் | அஞ்சனாக்ஷியம்மை |
| 66 | காட்டுப்பள்ளி - கீழை | ,, | ஆரணியசுந்தரேசுவரர் | அகிலாண்ட நாயகி |
| 67 | ,, ,, - மேலை† | ,, | தீயாடியப்பர் | சௌந்தர நாயகி |
| 68 | காவிரிப்பூம்பட்டினம் | ,, | பல்லவனேசுவரர் | சௌந்தர நாயகி |
| 69 | காளத்தி* | தொ | காளத்தீசுவரர் | ஞானப்பூங்கோதை |
| 70 | காறாயில் | சோ | கண்ணாயிரநாதர் | கைலாய நாயகி |
| 71 | கானப்பேர்‡ | பா | காளையீசுவரர்; சுந்தரேசுவரர்; சோமேசுவரர் | சொர்ணவல்லி, மீனாக்ஷி, சௌந்தர நாயகி |
| 72 | கானூர்† | சோ | செம்மேனிநாதர் | சிவயோக நாயகி |
| 73 | கீழ்வேளூர்† | ,, | கேடிலியப்பர் | வனமுலை நாயகி |
| 74 | குடந்தைக்காரோணம் | ,, | காசிவிசுவநாதர் | விசாலாக்ஷி |
| 75 | குடமூக்கு† | ,, | கும்பேசுவரர் | மங்கள நாயகி |

| | | | | |
|---|---|---|---|---|
| 76 | குடவாயில் | சோ | கோணேசுவரர் | பெரிய நாயகி |
| 77 | குரங்கணின்முட்டம் | தொ | வாலீசுவரர் | இறையார் வளையம்மை |
| 78 | குரங்காடுதுறை - தென்† | சோ | ஆபத்சகாயேசுவரர் | பவளக் கொடியம்மை |
| 79 | ,, ,, - வட | ,, | குலைவணங்கீசுரர் | அழகுசடைமுடியம்மை |
| 80 | குருகாவூர்‡ | ,, | வெள்ளிடையீசுவரர் | காவியங்கண்ணி |
| 81 | குற்றாலம் | பா | குறும்பலாஈசுவரர் | குழல்வாய் மொழியம்மை |
| 82 | கேதாரம்‡ | வ | கேதாரேசுவரர் | கேதார கௌரியம்மை |
| 83 | கேதீச்சுரம்‡ | ஈ | கேதீசுவரர் | கௌரியம்பிகை |
| 84 | கைச்சினம் | சோ | கைச்சினநாதேசுவரர் | வெள்வளையம்மை |
| 85 | கொடிமாடச்செங்குன்றூர் | கொ | அர்த்தநாரீசுவரர் | பாகம்பிரியாளம்மை |
| 86 | கொடுங்குன்றம் | பா | கொடுங்குன்றீசுரர் | குயிலமிர்த நாயகி |
| 87 | கொள்ளம்பூதூர் | சோ | வில்வவனேசுவரர் | சௌந்தராம்பிகை |
| 88 | கொள்ளிக்காடு | ,, | அக்கினீசுவரர் | பஞ்சினு மெல்லடியம்மை |
| 89 | கோகரணம்† | து | மகாபலநாதர் | கோகர்ண நாயகி |
| 90 | கோடிகா† | சோ | திரிகோடீசுவரர் | திரிபுர சுந்தரி |
| 91 | கோட்டாறு | ,, | ஐராவதேசுவரர் | வண்டமர்பூங்குழலம்மை |
| 92 | கோட்டூர் | ,, | கொழுந்தீசுவரர் | தேன்மொழிப்பாவை |
| 93 | கோணமலை | ஈ | கோணேசுவரர் | மாதுமையாள் |
| 94 | கோயில்* | சோ | திருமூலநாதர் | உமையம்மை |
| 95 | கோலக்கா‡ | ,, | சத்தபுரீசுவரர் | ஓசை கொடுத்த நாயகி |
| 96 | கோவலூர்† | ந | வீரட்டேசுவரர் | சிவாநந்தவல்லி |
| 97 | கோழம்பம்† | சோ | கோகிலேசுவரர் | சௌந்தர நாயகியம்மை |
| 98 | கோளிலி* | ,, | கோளிலிநாதேசுவரர் | வண்டமர்பூங்குழலம்மை |
| 99 | சக்கரப்பள்ளி | ,, | பசுபதிநாயகர் | அல்லியங்கோதை |
| 100 | சாத்தமங்கை | ,, | அயவந்தீசுவரர் | மலர்க்கண்ணம்மை |

| எண் | தலத்தின் பெயர் | நாடு | சுவாமி பெயர் | தேவியார் பெயர் |
|---|---|---|---|---|
| 101 | சாய்க்காடு† | சோ | சாயாவனேசுவரர் | குயிலினுநன்மொழியம்மை |
| 102 | சிக்கல் | ,, | வெண்ணெயிலிங்கேசுவரர் | வேனெடுங்கண்ணி |
| 103 | சிராப்பள்ளி† | ,, | தாயுமானேசுவரர் | மட்டுவார்குழலம்மை |
| 104 | சிவபுரம்† | ,, | சிவபுரநாதர் | சிங்கார வல்லி |
| 105 | சிறுகுடி | ,, | மங்களேசுவரர் | மங்கள நாயகி |
| 106 | சிற்றேமம் | ,, | பொன்வைத்தநாதர் | அகிலாண்ட நாயகி |
| 107 | சீகாழி* | ,, | பிரமபுரீசுவரர் | திருநிலை நாயகி |
| 108 | செங்காட்டங்குடி† | ,, | கணபதீசுவரர் | திருக்குழனுயகி |
| 109 | செம்பொன்பள்ளி† | ,, | சொர்ணபுரீசுவரர் | மருவார் குழலி |
| 110 | சேய்ஞ்ஞலூர் | ,, | சத்தியகிரீசுவரர் | சகிதேவி |
| 111 | சேறை† | ,, | செந்நெறியப்பர் | ஞானவல்லி |
| 112 | சோபுரம் | ந | சோபுரநாதேசுவரர் | சோபுர நாயகி |
| 113 | சோற்றுத்துறை* | சோ | ஓதவனேசுவரர் | அன்னபூரணி |
| 114 | தண்டலைநீணெறி | ,, | நீணெறிநாதேசுவரர் | ஞானம்பிகை |
| 115 | தருமபுரம் | ,, | யாழ்மூரிநாதேசுவரர் | தேனமிர்தவல்லி |
| 116 | தலைச்சங்காடு | ,, | சங்கருணைதேசுவரர் | சௌந்தர நாயகி |
| 117 | திருந்துதேவன்குடி | ,, | கற்கடேசுவரர் | அருமருந்தம்மை |
| 118 | திலதைப்பதி | ,, | முத்தீசுவரர் | பொற்கொடியம்மை |
| 119 | துருத்தி* | ,, | வேதேசுவரர் | முகிழாம்பிகை |
| 120 | தெங்கூர் | ,, | வெள்ளிமலை நாதேசுவரர் | பெரியநாயகி |
| 121 | தெளிச்சேரி | ,, | பார்வதீசுவரர் | சத்தியம்மை |
| 122 | தென்குடித்திட்டை | ,, | பசுபதீசுவரர் | உலகநாயகி |

| | | | | |
|---|---|---|---|---|
| 123 | தேவூர் | சோ | தேவபுரீசுவரர் | பண்ணிலாவிய மொழியுமை |
| 124 | நணா | கொ | சங்கமுகநாதேசுவரர் | வேதாம்பிகை |
| 125 | நல்லம்† | சோ | உமாமகேசுவரர் | மங்களநாயகி |
| 126 | நல்லூர்† | ,, | கலியாணசுந்தரேசுவரர் | கலியாணசுந்தரி |
| 127 | நல்லூர்ப்பெருமணம் | ,, | சிவலோகத் தியாகேசர் | நங்கையுமையம்மை |
| 128 | நள்ளாறு* | ,, | தர்ப்பாரண்யேசுவரர் | போகமார்த்தபூண்முலையம்மை |
| 129 | நறையூர்‡ | ,, | சித்தநாதேசுவரர் | அழகாம்பிகை |
| 130 | நனிபள்ளி* | ,, | நற்றுணையப்பர் | மலையான்மடந்தை |
| 131 | நாகேச்சுரம் | ,, | நாகநாதேசுவரர் | குன்றமுலைநாயகி |
| 132 | நாகைக்காரோணம்* | ,, | காயாரோகணேசுவரர் | நீலாயதாக்ஷி |
| 133 | நாரையூர்† | ,, | சௌந்தரேசுவரர் | திரிபுரசுந்தரியம்மை |
| 134 | நாலூர்மயானம் | ,, | பலாசவனேசுவரர் | பெரியாம்பிகை |
| 135 | நின்றியூர்* | ,, | மகாலக்ஷுமீசுவரர் | உலகநாயகி |
| 136 | நெடுங்களம் | ,, | நித்தியசுந்தரேசுவரர் | ஒப்பிலாநாயகி |
| 137 | நெய்த்தானம்† | ,, | நெய்யாடியப்பர் | இளமங்கையம்மை |
| 138 | நெல்லிக்கா | ,, | நெல்லிவனநாதேசுவரர் | மங்களநாயகி |
| 139 | நெல்வாயில் | ,, | உச்சிநாதேசுவரர் | கனகாம்பிகை |
| 140 | நெல்வாயில் அரத்துறை* | ந | அரத்துறைநாதர் | ஆனந்தநாயகி |
| 141 | நெல்வெண்ணெய் | ,, | வெண்ணெயப்பர் | நீலமலர்க்கண்ணம்மை |
| 142 | நெல்வேலி | பா | நெல்லையப்பர் | காந்திமதியம்மை |
| 143 | பட்டீச்சுரம் | சோ | பட்டீசுவரர் | ஞானாம்பிகை |
| 144 | பந்தணைநல்லூர்† | ,, | பசுபதீசுவரர் | காம்பனதோளியம்மை |
| 145 | பரங்குன்று‡ | பா | பரங்கிரிநாதேசுவரர் | ஆவுடைநாயகி |
| 146 | பராய்த்துறை† | சோ | பராய்த்துறைநாதர் | பொன்மயிலாம்பிகை |
| 147 | பரிதிநியமம் | ,, | பரிதியப்பர் | மங்களநாயகி |

| எண் | தலத்தின் பெயர் | நாடு | சுவாமி பெயர் | தேவியார் பெயர் |
|---|---|---|---|---|
| 148 | பருப்பதம்* | வ | பருப்பதநாதர் | பருப்பதநாயகி |
| 149 | பழனம்† | சோ | ஆபத்சகாயேசுவரர் | பெரியநாயகி |
| 150 | பழூவூர் | ,, | வடமூலநாதேசுவரர் | அருந்தவநாயகி |
| 151 | பறியலூர் | ,, | வீரட்டேசுவரர் | இளங்கொடியம்மை |
| 152 | பனந்தாள் | ,, | செஞ்சடையப்பர் | பெரியநாயகி |
| 153 | பனையூர்‡ | ,, | சௌந்தரியநாதர் | பெரியநாயகி |
| 154 | பாசூர்† | தொ | பாசூர்நாதர் | பசுபதிநாயகி |
| 155 | பாச்சிலாச்சிராமம்‡ | சோ | மாற்றறிவரதர் | பாலசௌந்தரி |
| 156 | பாண்டிக்கொடுமுடி* | கொ | கொடுமுடிநாதர் | பண்மொழிநாயகி |
| 157 | பாதாளீச்சுரம் | சோ | நாகநாதர் | அமிர்தநாயகி |
| 158 | பாதிரிப்புலியூர்† | ந | பாடலேசுவரர் | பெரியநாயகி |
| 159 | பாம்புரம் | சோ | பாம்புரேசுவரர் | வண்டார்பூங்குழலி |
| 160 | பாற்றுறை | ,, | மூலநாதேசுவரர் | மேகலாம்பிகை |
| 161 | புகலூர்* | ,, | அக்கினீசுவரர் | கருந்தாள்குழலி |
| 162 | புகலூர்வர்த்தமானீச்சரம் | ,, | வர்த்தமானேசுவரர் | ,, ,, |
| 163 | புத்தூர்† | பா | புத்தூரீசுவரர் | சிவகாமியம்மை |
| 164 | புள்ளமங்கை | சோ | ஆலந்தரித்த ஈசுவரர் | அல்லியங்கோதை |
| 165 | புள்ளிருக்குவேளூர்† | ,, | வைத்தியநாதர் | தையல்நாயகி |
| 166 | புறம்பயம்* | ,, | சாக்ஷிநாதேசுவரர் | கரும்பன்னசொல்லம்மை |
| 167 | புறவார்பனங்காட்டூர் | ந | பனங்காட்டீசுவரர் | புறவாம்பிகை |
| 168 | புனவாயில்‡ | பா | பழம்பதிநாதேசுவரர் | கருணைநாயகி |
| 169 | புன்கூர்* | சோ | சிவலோகநாதர் | சொக்கநாயகி |

| | | | | |
|---|---|---|---|---|
| 170 | பூவணம்* | பா | பூவணநாதேசுவரர் | மின்னனையாளம்மை |
| 171 | பெண்ணுகடம்† | ந | சுடர்க்கொழுந்தீசர் | கடந்தைநாயகி |
| 172 | பெரும்புலியூர் | சோ | வியாக்கிரபுரீசுவரர் | சௌந்தரநாயகி |
| 173 | பெருவேளூர்† | ,, | பிரியாஈசுவரர் | மின்னனையாளம்மை |
| 174 | பேணுபெருந்துறை | ,, | சிவாநந்தேசுவரர் | மங்களநாயகி |
| 175 | பைஞ்ஞீலி* | ,, | நீலகண்டேசுவரர் | விசாலாக்ஷி |
| 176 | மங்கலக்குடி† | சோ | பிராணவரதேசுவரர் | மங்களநாயகி |
| 177 | மணஞ்சேரி† | ,, | அருள்வள்ளல்நாயகர் | யாழின்மொழியம்மை |
| 178 | மயிலாடுதுறை† | ,, | மாயூரநாதேசுவரர் | அபயாம்பிகை |
| 179 | மயிலாப்பூர் | தொ | கபாலீசுவரர் | கற்பகவல்லி |
| 180 | மயேந்திரப்பள்ளி | சோ | திருமேனியழகர் | வடிவாம்பிகை |
| 181 | மருகல்† | ,, | மாணிக்கவண்ணேசுவரர் | வண்டுவார்குழலம்மை |
| 182 | மழபாடி* | ,, | வஜ்ரஸ்தம்பேசுவரர் | அழகாம்பிகை |
| 183 | மறைக்காடு* | ,, | வேதாரண்யேசுவரர் | யாழைப்பழித்தமொழியம்மை |
| 184 | மாகறல் | தொ | அடைக்கலங்காத்தநாதர் | புவனநாயகி |
| 185 | மாணிகுழி | ந | மாணிக்கவரதேசுவரர் | மாணிக்கவல்லி |
| 186 | மாந்துறை | சோ | ஆம்ரவனேசுவரர் | அழகாலுயர்ந்தஅம்மை |
| 187 | மாற்பேறு† | தொ | மால்வணங்கீசுவரர் | கருணைநாயகி |
| 188 | மீயச்சூர் | சோ | முயற்சிநாதேசுவரர் | சௌந்தரநாயகி |
| 189 | முதுகுன்றம்* | ந | பழமலைநாதர் | பெரியநாயகி |
| 190 | முல்லைவாயில் - தென் | சோ | முல்லைவனநாதர் | கோதையம்மை |
| 191 | மூக்கீச்சுரம் | ,, | பஞ்சவர்ணேசுவரர் | காந்திமதி |
| 192 | வக்கரை | தொ | சந்திரசேகரர் | வடிவாம்பிகை |
| 193 | வடுகூர் | ந | வடுகேசுவரர் | வடுவகிர்க்கண்ணம்மை |
| 194 | வலஞ்சுழி† | சோ | கற்பகநாதேசுவரர் | பெரியநாயகி |

| எண் | தலத்தின் பெயர் | நாடு | சுவாமி பெயர் | தேவியார் பெயர் |
|---|---|---|---|---|
| 195 | வலம்புரம்* | சோ | வலம்புரிநாதேசுவரர் | வடுவகிர்க்கண்ணம்மை |
| 196 | வலிதாயம் | தொ | வலிதாயநாதர் | தாயம்மை |
| 197 | வலிவலம்* | சோ | மனத்துணைநாதேசுவரர் | வாளையங்கண்ணியம்மை |
| 198 | வல்லம் | தொ | வல்லநாதேசுவரர் | வல்லாம்பிகை |
| 199 | வாஞ்சியம்* | சோ | வாஞ்சிலிங்கேசுவரர் | மங்களநாயகி |
| 200 | வாய்மூர்† | ,, | வாய்மூர்நாதேசுவரர் | பாலினுநன்மொழியம்மை |
| 201 | வாளொளிபுற்றூர்‡ | ,, | மாணிக்கவண்ணேசுவரர் | வண்டார்பூங்குழலம்மை |
| 202 | வான்மியூர்† | தொ | மருந்தீசுவரர் | சொக்கநாயகி |
| 203 | விசயமங்கை† | சோ | விஜயநாதேசுவரர் | மங்கைநாயகி |
| 204 | விடைவாய் | ,, | விடைவாயப்பர் | உமையம்மை |
| 205 | வியலூர் | ,, | யோகாநந்தேசுரர் | சௌந்தரநாயகி |
| 206 | விளநகர் | ,, | துறைகாட்டுவள்ளலார் | வேயுறுதோளி |
| 207 | விளமர் | ,, | பதஞ்சலிமநோகரேசுவரர், வியாக்ரபாதேசுவரர் | யாழினுமென்மொழியம்மை |
| 208 | விற்குடி | ,, | வீரட்டானேசுவரர் | ஏலவார்குழலி |
| 209 | விற்கோலம் | தொ | திரிபுராந்தகேசுவரர் | திரிபுராந்தகி |
| 210 | வீழிமிழலை* | சோ | வீழியழகேசுவரர் | சுந்தரகுஜாம்பிகை |
| 211 | வெண்காடு* | சோ | சுவேதாரணியேசுவரர் | பிரமவித்தியாநாயகி |
| 212 | வெண்டுறை | ,, | வெண்டுறைநாதேசுரர் | வேனெடுங்கண்ணி |
| 213 | வெண்ணியூர்† | ,, | வெண்ணிக்கரும்பர் | அழகியநாயகி |
| 214 | வேட்களம்† | ,, | பாசுபதேசுவரர் | நல்லநாயகி |

| | | | | |
|---|---|---|---|---|
| 215 | வேட்டக்குடி | சோ | திருமேனியழகேசுவரர் | சாந்தநாயகி |
| 216 | வேதிகுடி† | ,, | வேதபுரீசுவரர் | மங்கையர்க்கரசி |
| 217 | வேள்விக்குடி‡ | ,, | கலியாணசுந்தரேசுவரர் | பரிமளசுகந்தநாயகி |
| 218 | வேற்காடு | தொ | வேற்காட்டீசுவரர் | வேற்கண்ணி |
| 219 | வைகன்மாடக்கோயில் | சோ | வைகனாதேசுவரர் | வைகலாம்பிகை |
| 220 | வைகாவூர் | ,, | வில்வவனேசுவரர் | வளைக்கைநாயகி |

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பாட்டு முதற்குறிப்பகராதி